உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 40 ] ரௌத்திரி ஆண்டு மார்கழித்திங்கள் 10—1—81 [ இதழ் 2

உலகெலாம் பசியும் பிணியும் நீங்கி - வசியும் வளனும் சுரக்க
அருள்பாலிக்கும்



அன்னை தானிய லட்சுமியின் திருவுருவம்

இவ்விதழில் காட்சி தருகிறது.

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—[★]—

பூண்டமலம் மாண்டுவிடப்
போந்தசிவா னந்தவெள்ளத்
தாண்டுமெனை மீண்டுவிட
லாகுமோ — நீண்டமால்
வீரென்பார் தாரா
விமலா எனைக்கண்டார்
ஆரென்பார் சொக்கநாதா.

—சொக்கநாத வெண்பா. 72

ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்.

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 40 || 10-1-81 || இதழ் 2

## உட்பொருள்



ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 10.
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 12.
ஆண்டுச் சந்தா வெளிநாடு ரூ. 18
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 100.
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 125.

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 40 | ரௌத்திரி - மார்கழி - 10—1—81 | இதழ் 2

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# நம்பினோர் கெடுவதில்லை!



## அதிர்ச்சியூட்டும் அறிவிப்பு

தமிழகத்தின் தெய்வத்தானங்களாக விளங்கும் திருக்கோயில்களுக்கும், திருமடங்களுக்கும் அதிர்ச்சியூட்டும் அறிவிப்பு ஒன்றைத் தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. ஆர். எம். வீரப்பன் அவர்கள் அண்மையில் திருச்சிராப்பள்ளியில் வெளியிட்டுள்ளார். இந்துசமயத் திருக்கோயில்களுக்குப் பலராலும், பலகாலங்களிலும் வழங்கப்பெற்று நெடுநாட்களாக இவற்றின் வளர்ச்சிக்கு உதவிவரும் நஞ்சை — புஞ்சை நிலங்களை இவற்றிடமிருந்து பறித்து, சக்கரமில்லாத தேர்போல் ஓரளவு இன்று இயங்கிவரும் இவற்றின் இயக்கத்தை முற்றிலுமாக நிறுத்திவிடும் ஒரு அறிவிப்பாகவே அது அஞ்சத்தக்கவகையில் வெளியிடப்பட்டுள்ளது. அமைச்சர் அவர்கள் அறிவித்ததாவது :-

"தமிழ்நாட்டில், நிதிநிலைமை சீராக இல்லாமல் திருக்கோயில்கள் சிரமப்படுவதாலும், பல கோயில்களுக்கு நிலங்களிலிருந்து வருமானம் வராததாலும், கோயில் நிலங்களை அரசு எடுத்துக்கொண்டு, அதற்கு நஷ்ட ஈடாக ஒரு குறிப்பிட்ட காலம்வரை, ஆண்டுதோறும் ஒரு தொகையைச் செலுத்லாம் என்று அரசுக்கு அறநிலைய இலாகா யோசனை கூறியுள்ளது. ..............அறநிலையத்துறை வழங்கியுள்ள யோசனைகள் விவரம் வருமாறு ;-

1. கோயில்களுக்குச் சொந்தமான நிலங்களை அரசு நியாயமான ஒரு விலைகொடுத்து எடுத்துக்கொள்ளவேண்டும். இந்த விலை அப்போது இருக்கும் மார்க்கெட் விலையை விடக் குறைவானதாக இருக்கலாம். ஆனால், உச்சவரம்புச் சட்டத்தின்கீழ் உபரி நிலங்களுக்கு அளிக்கப்படும் நஷ்ட ஈட்டுத் தொகையைவிட அதிகமாக இருத்தல்வேண்டும்.

2. விலையை ஒரே தவணையில் கொடுக்கவேண்டும் என்பதில்லை ஆலயங்களுக்கு நிலத்தின் விலையைப் பாண்டுகளாக (பத்திரம்)க் கொடுத்துவிட்டு பராமரிப்புச் செலவுகளுக்காக ஒரு குறிப்பிட்டகாலத்திற்கு ஆண்டுதோறும் ஒரு தொகையை வழங்கலாம்.

3. அரசு இவ்வாறு எடுத்துக்கொண்ட கோயில் நிலங்களை 20 அல்லது 25 ஆண்டுகளில் உழும் குத்தகைதாரர்களிடமே ஒப்படைத்துவிடலாம். இதற்காக நிலத்தின் கிரய மதிப்பை அரசே நிர்ணயிக்கவேண்டும். குத்தகைதாரர்கள் மகசூலில் உரிமையாளருக்கு (அரசுக்கு) தரவேண்டிய 25 சதவிகித விளைபொருளையே தவணைத் தொகையாகக்கருதி எளிய தவணைகள்மூலமாக இதை வசூலிக்கலாம். ......................கோயில்களுக்கு வருடாவருடம் உதவித் தொகை வழங்குவதால் மாநில அரசின் நிதிநிலை பாதிக்கப்படாது. காரணம் அரசுக்கு ஆண்டு வருமானமாக சுமார் ரூ. 1000 கோடி வருகிறது. கோயில்களுக்குக் கொடுக்கப்படவேண்டியன சில கோடி ரூபாய்களேயிருக்கும்.

— தினமணி, 17—11—80. (மதுரைப்பதிப்பு) பக்-2.

## மறைமுகமான அழிவு முயற்சி

இப்படி ஒரு சட்டம் கொண்டுவரப்படுமானால் அது நேரடியாக அல்லாது மறைமுகமாக இந்து ஆலயங்களை முடக்கி, இந்து தர்மத்தையும், பண்பாட்டையும் முற்றிலும் அழித்தொழிக்கும் முயற்சியின் முன்னோடி நடவடிக்கை என்றே கருதத்தகும். நிலங்களுக்கு அரசு நஷ்ட ஈடு தருவதுபோன்ற தோற்றம் இந்த அறிவிப்பில் காணப்பட்டாலும் இது உண்மையில் அறநிலையங்களுக்கு நன்மையாய் முடியாது என்பதனை அனைவரும் ஆழமாகச் சிந்திக்கவேண்டும். இது அவசியமானது மட்டுமல்ல. மிக்க அவசரமானதுமாகும்.

பண்டைய நம் முன்னோர்கள் நமது திருக்கோயில்களுக்குப் பொன்னையும், மணியையும், பணத்தையும் நிவந்தங்களாக ஓரளவு வழங்கினார்கள். அவையெல்லாம் பல அறநிலையங்களில் இன்று இல்லை. அதிகம் நிலங்களாக வழங்கியதன் நோக்கம் பெரிது. அழியாத, நிலையான சொத்துக்களாக விளங்கும் விளைநிலங்களின் நிரந்தர வருவாயால் தடைபடாது இவ்வறங்கள் நிகழவேண்டுமென்ற நம் முன்னோர் நோக்கத்தினை இப்போது தகர்க்க நினைத்தல் அறமாகாது. எந்த அறமும், அதனை நிறுவியவர்களின் விருப்பங்களுக்கு மாறுச் செயல்படுத்த இயலாத சட்டப்பாதுகாப்பு இப்போதும் உள்ளது இருந்தும் தொடர்ந்து 25 ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் அடுத்தடுத்து ஆட்சியேற்ற அரசுகள் இப்போது நியதியைப் புறக்கணித்து அற நிலையங்களைச் செயலிழக்க வைப்பது, பிற்காலச் சந்ததியார்களால் ஆராயப்பெற்றுப் பெரிதும் இகழப்படும் என்பது ஒருதலை தமிழ் நாட்டில் எந்தஒரு கோயிலும் தற்போது நிலவி வரும் அரசால் கட்டப் பெற்றதில்லை. எவற்றுக்கும் அவை வழங்கிய சொத்துக்களும் ஏது மில்லை மேலதிகார நிலையில் உள்ள அரசு அவ்வத்தரப்பு மக்களின் நாகரிகம், மரபு, பண்பாடு, வழிபாட்டுரிமை இவற்றைப் பாதுகாத்து வழங்கவேண்டுமேயன்றி இவற்றிற்கு மறைமுகமாகக் கேடு சூழ்தல் நாகரிகமாகாது.

## உள்நோக்கம் என்ன ?

கோயில் நிலங்களைக் குத்தகைதாரர்களுக்கே உரிமையாக்க நினைக்கும் அரசின் ஏற்பாட்டுக்கு அடிப்படைக் காரணம் என்ன ? ஒன்று அரசியல் ஆதாயம் ! இதனை அரசு வெளிப்பட ஒப்பாது. அவர்கள் கூறும் வேறு காரணம் வறுமைக்கோட்டின் கீழ்வாழும் உழவர் பெருமக்களுக்கு இதன் மூலம் வாழ்வளிப்பது என்பதாகும். உண்மையிலேயே அரசின் நோக்கம் இதுவானால், நிலங்களைக் குத்தகைதாரர்களுக்கு உரிமையாக்குதல் கூடாது. கோயில் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துள்ள நேரடிக் குத்தகைதாரர்களில்

பலரிடம் இப்போது இந்நிலங்கள் இல்லை. உழவர்களின் வாரத்தின் பங்கை 40, 60, 75 என்று பலமுறை அரசுகள் மாற்றி அவர்களுக்கு நலஞ்செய்ய முயன்றன இருந்தும் இந்நிலங்களில் அவர்கள் தாமே உழைத்துப்பயன் பெறுது, கோயில் குத்தகை நிலங்களை ஒருதொகை பெற்றுக்கொண்டு வேறு சிலருக்கு மாற்றிக் கொடுத்துவிட்டு அவர்கள் பழையபடி வறுமையிலேயே வாழ்கின்றனர். இன்று கோயில் குத்தகைகளில் பெரும்பகுதி நேரடிக் குத்தகைதாரர் கையில் இல்லாது பினாமிகள் பலரிடம் உள்ளதை அரசின் மேன்மட்டத்தில் உள்ளவர்கள் அறிந்திருந்தும் அறியாதார் போல் இருப்பதாகவே தோன்றுகிறது.

## அதனைவிடுத்து இதனைச்செய்க

அரசு இவர்களுக்கு உண்மையிலேயே நன்மை செய்ய விரும்பினால், நிலங்களைக் கோயில்களிடமே உரிமையாக இருக்கச்செய்து வேறுசில உதவிகளை அவர்களுக்குச் செய்யலாம். குத்தகைதாரர் தம் குத்தகை உரிமையைக் கோயிலின் (அறநிலைய இலாகா)வழியாக அன்றித் தாமே வேறுசிலருக்கு மாற்றிக்கொடுக்கும் நிலைக்குத் தடை விதிக்கவேண்டும். கோயில் நிலங்களை அவை பண்ணைச்சாகுபடிக்காக இவர்களிடம் இருந்து பறிக்க ஒருபோதும் நினைத்ததில்லை இப்போது இறைவன் பெயரில் பட்டாவேதவிர முழுஉரிமையாளராய்க் குத்தகைதாரரே விளங்குகிறர். எனவே, அரசு இவர்களை இந்நிலங்களில் உரிமையோடும், உற்சாகத்தோடும் உழுதுபயிரிட உதவுவதே அவர்களுக்குச் செய்யும் பேருதவியாகும். தீவிர விவசாயங்களில் இவர்களுக்குப் பயிற்சியளித்தல், இலவச மானியங்கள் வழங்குதல், குறைந்த வட்டியில் கடன் கொடுத்து உதவுதல், பயிர்பாதுகாப்பு இன்ஷிரன்ஸ் திட்டங்களைக் கொணர்தல் போன்ற பலவற்றை அரசு செய்வதே இவர்களை உண்மையாக வாழவைக்கும் முயற்சியாக அமையும்.

## ஒரு விளக்கம் கேட்கிறோம்

அரசினிடம் ஒரு விளக்கம் கேட்கும் உரிமை அனைவருக்கும் உண்டு. அரசுக்குச் சேரவேண்டிய நிலவரி பாக்கி, மின்கட்டண பாக்கி போன்றவற்றைச் சட்டபூர்வமான நடவடிக்கைகள் வாயிலாக வசூலிக்கும் அரசு, பல ஆண்டுகளாக 60, 40, 25 எனத் தேய்ந்து கொண்டே வந்த 'அறநிலையங்களின் நிலக்குத்தகையின் உரிய வாரத்தை இவைபெற அல்லது வசூலிக்க என்ன உதவியைச் சட்டபூர்வமாக இவற்றுக்குச் செய்துள்ளது? அரசுக்கு உரிய வரிகள்

வரவில்லை என்ருல் அது எவ்வாறு இயங்கும். அரசுக்குக் கொடுக்கும் வரிகளைக் கொடுக்காதே என்று தனி மனிதன் கூறினுல் அது தண்டனைக்குரிய குற்றம். ஆனுல் அறநிலையங்களுக்கு உரிய மிகச்சிறிய வாரத்தை - பங்கை அவர்களுக்குச் செலுத்த இயலாதவாறு பல முறை ஒத்திவைக்கும் சட்ட உரிமைப் பறிப்புக்களால் மறைமுகமாக அரசே செயல்படுமாருல் இதனை என்னஎன்று கூறுவது? தமிழக அரசு பணப்பாண்டுகளோ, .பண உதவிகளோ தரத்தேவையில்லை. உரிய பங்கினை 40 வீதத்திற்குக் குத்தகைதாரரிடமிருந்து பெற்றுத்தந்தால் அதுவே பெரிய உதவியாகும்.

## அறநிலையத் தன்னுட்சிக்குழு

வந்து நின்று செல்லும் கட்சி அரசுகளின் கொள்கைகள் வேறுபடலாம். நிரந்தரமான அறநிலையங்களின்மேல் அரசின் ஆதிக்கம் இருத்தல்தவருகும். எனவே, அரசு, அதுகூறிவருவதுபோல், தமிழகக் கலைச்செல்வங்களைப் பேணிக்காக்கும் நாகரிகப்பண்பாட்டுச் சின்னங்களாகத் திகழும் உயிருள்ள திருக்கோயில்களைப் பாதுகாக்க நினைத்தால், எக்காலத்திலும் அரசியல் வாதிகளின் தலையீடு இல்லாத ஒரு சுயாதிக்க தன்னுட்சிக்குழுவிடம் இவ்வறநிலையங்களின் பராமரிப்பை ஒப்படைக்கவேண்டும். சமயச் சான்ருேர்கள், கல்வியாளர்கள், நீதிபதிகள், நடுநிலையாளர்கள்பலரைக்கொண்டு, முன்பு நிலவிவந்தது போன்ற ஒரு தன்னுட்சிக்குழுவினை உடன் நிறுவி, அடிமுதல் முடிவரை இந்நிலையங்களின் நிர்வாகப் பொறுப்பை இவற்றிடம் ஒப்படைத்தலே, அரசின் நோக்கம் பற்றிய மக்களின் ஐயங்களை நீக்கும். நல்லெண்ணம் கொண்ட அரசு இன்றுமட்டுமல்லாது வருங்காலத்திலும் மக்களின் பாராட்டைப்பெற இதனை உடனடியாகச் செய்தலே தக்கது. அரசு செய்யுமென்று நம்புகின்ருேம். நம்பினுேர் கெடுவதில்லை. இது நான்குமறைத் தீர்ப்பு.

**அறநிலையங்கள் வளர்வதாக,**

**அரசு வாழ்வதாக.**

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

விஸ்வ ஹிந்து பரிஷத்தின் சார்பில்

மாயூரம் A. V. C. புதிய திருமண மண்டபத்தில் நடைபெற்ற

தஞ்சை மாவட்ட ஹிந்து மாநாட்டின் தொடக்கநாளன்று

வழங்கியருளிய

# ஆசியுரை

3-1-1981

"போற்றும் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றும் தகையன ஆறு சமயத் தவரவரைத்
தேற்றும் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றும் தகையன இன்னம்பரான்றன் இணையடியே"

## நெறி : சமயம் : மதம் :

கடவுள் மற்றும் கடவுளைப்பற்றிய வழிபாட்டுமுறைகளைக் குறிக்க நெறி – சமயம் – மதம் என்ற சொற்கள் இன்று ஆளப்பட்டு வருகின்றன. நெறி என்ற சொல்லுக்கு வழி, பாதை என்பதுபொருள். இச்சொல்லே நெடுங்காலமாக வழக்கில் இருந்துவருகிறது. 'வேதநெறி தழைத்தோங்க' என்றும், 'சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தன்மையினால்' என்றும் நெறி என்ற சொல் வழக்காற்றில் இருந்து வந்திருப்பதை உணரலாம். இதன்பின் வந்தசொல் சமயம் என்பது. வடமொழியில் இச்சொல் நேரம், கட்டுப்பாடு என்ற இரு பொருள்களைக் குறிக்கிறது. தமிழில், பக்குவப்படுத்துதல் என்ற பொருள் தருகிறது. இடைக்காலத்தில் இந்துசமயம், சைவ சமயம் என இச்சொல், நெறி என்ற சொல்வழங்கும் பொருளிலேயே ஆளப்பெற்றது. பிற்காலத்தே 'மதம்' என்றசொல் வழக்கில் வந்தது. மதம் என்ற சொல்லுக்குக்

கொள்கை – கருத்து – எண்ணம் என்பன பொருள்கள். இச்சொல்லே தற்போது பெருவழக்குப்பெற்று வழங்கப்பட்டுவருகின்றது. நெறி – சமயம் – மதம் என்ற சொற்களுக்கிடையே பெரிய பொருள்வேறு பாடுகள் ஏதும் இல்லை. மனிதனைப் பக்குவப்படுத்தி உயர்நிலைக்குக் கொண்டுசெல்லும் நிலைகளையே இவை குறித்துநிற்கின்றன. இவ்வகையில் நமது இந்தியநாட்டு வேதவழிப்பட்ட சமயங்களைக் குறிக்கத் தற்போது இந்துமதம் என்றசொல் வழக்கில் உள்ளது. இந்துமதம் என்ற குறியீடுபற்றி நாம் இங்கே சிறிது சிந்தித்தல் வேண்டத்தக்கதாகும்.

## ‘இந்து’ என்ற வழக்காறு :

பாரத நாட்டில் வழங்கிவரும் வேதவழிப்பட்ட சமயங்கள் பல வற்றையும் குறிக்க இந்துமதம் என்ற சொல் வழங்கப்பட்டு வருகிறது. வேதத்திலோ அல்லது தொன்மையான இந்திய இலக்கியங்களிலோ இந்துமதம் என்ற சொல் இல்லை என ஆராய்ச்சி முடிவுகள் தெளிவாக அறிவிக்கின்றன. ஹிந்து என்ற பாரசீகச் சொல்லைக் கிரேக்கர்கள் இந்து என வழங்கினர். அலெக்சாண்டர் இமயமலைக் கணவாய் வழியே சிந்துநதிக்கரைக்கு வந்தபோது, அப்பகுதியில் வாழ்ந்த மக்களை சிந்து - ஹிந்து - இந்து என வழங்கினர். மேலை நாட்டாரும் கிரேக்கர் இட்ட இக்குறியீட்டையே மேற்கொண்டு இந் நாட்டு மக்களை இந்துக்கள் என்றும், இவர்கள் சமயத்தை இந்துமதம் என்றும், இவர்கள் நாட்டை இந்தியா என்றும் வழங்கினர். நமது பண்டைய வழக்காற்றின்படி இந்நாட்டைப் பாரதம், பரதக்கண்டம் என்றும், இங்கே வழங்கிய சமயநெறியை வேதவழிப்பட்ட வைதிக நெறி என்றும், வைதிக சைவம் என்றும் வழங்கிவருகிறோம்.

## மாநாடு தேவையா ?

விஸ்வஹிந்து பரிஷத் போன்ற பேரியக்கமும், இம்மாதிரி மாநாடும் சமயத்திற்குத் தேவையா என்ற கேள்வி உருவாவது இயற்கை. பசியறிந்து பாலூட்டும் தாயும், தேவையறிந்து குறை தீர்க்கும் அரசும், நீதியறிந்து முறைசெய்யும் ஆட்சியும் உள்ளவரை யாரும் அழுதும் போராடியும் எதனையும் பெறவேண்டியதில்லை. ஆனல் இன்று அந்நிலை இல்லை. பசித்தமுகம் பார்த்துப் பாலூட்டும் அன்பு தலையன்பு ; குழந்தை அழுதபின்னர் அறிந்து பாலூட்டும் அன்பு இடையன்பு ; அழுதபின்னரும் பாலூட்டாத அன்பு கடையன்பு. தலையன்பு இக்காலத்தில் நாட்டிலும் வீட்டிலும் மிகவும் அருகி வருகிறது எனவேதான் வீட்டிலும்சரி நாட்டிலும்சரி எதனையும் கேட்டுப் பெறவேண்டிய அவசியம் உருவாகிவிட்டது.

ஆலயங்களுக்கும் அறச்சிந்தனையாளர்களுக்கும் பாதுகாப்பும் வாழ்வும் குறைந்துவரும் இந்நேரத்தில் 'விஸ்வ ஹிந்து பரிஷத்' போன்ற பேரியக்கம் தோன்றி மாநாடுகள்மூலமும், பத்திரிக்கைகள் மூலமும் அரசுக்கு இம்மாதிரியான குறைகளைத் தெரிவிக்க ஆரம்பித்துள்ளது கிளர்ச்சியில் ஈடுபடுவது - போராடுவது போன்றவை சமய நெறியாளர்களுக்கு ஒவ்வாதவை. ஆகவே அமைதிவழியில் தங்களின் நியாயமான கோரிக்கைகளை எடுத்தியம்பவே இம்மாநாடு இங்குக்கூட்டப்பட்டுள்ளது.

## சோழன்பெருமை :

'ஆயிரமானாலும் மாயூரமாகாது' என்பது பழமொழி. இத்தகு சிறப்பு வாய்ந்த மாயூர நகரத்தில் விஸ்வஹிந்து பரிஷத்தின் சார்பில் தஞ்சை மாவட்ட இந்து மாநாடு நடத்துவது பொருத்தமானதே. இம்மாநாட்டில் தஞ்சை மாவட்டத்திலிருந்தும் பிற மாவட்டங்களிலிருந்தும் அன்பர்கள் பலரும் வந்து கலந்துகொள்கின்றார்கள் என்னும் செய்தி மகிழ்ச்சிக்குரியது. தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்களும், தென்னார்க்காடு மாவட்டத்தின் தென்பகுதியும் முற்காலத்தில் சோழநாடு என்று அழைக்கப்பெற்ற பகுதிகளாகும். சோழநாடு எல்லா வகையாலும் முற்போக்கானது என்று கருதிவந்த காலம் அது. பிறசமயத்தின் ஆதிக்கம் தொண்டைநாடு, நடுநாடுகளாகிய பல்லவ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் புகுந்து பரவியிருந்ததுபோலச் சோழநாட்டில் எக்காலத்திலும் பரவியதில்லை. இது வரலாற்றுண்மை. அதனால்தான் நம்பியாண்டார் நம்பிகள்,

> "மைவைத்த கண்டன் நெறியன்றி
> மற்றோர் நெறிகருதாத் தெய்வக்குடிச் சோழன்"

என்று சோழமன்னனைப் பாராட்டுகின்றார்.

ஆனால் இன்று சோழநாட்டில் பக்தியும் கலைவளமும் வளர்ந்து வருகின்றனவா என்றால் எல்லோரும் சிந்தித்துப் பதில் சொல்ல வேண்டியதாகத்தான் உள்ளது. வளர்ந்தவர்கள் சில காலம், தளர்வதும் தளர்ந்தவர்கள் சிலகாலம் வளர்வதும் கால அமைப்பு என்பதற்கேற்ப இங்ஙனம் மாறினவோ என்று எண்ணவேண்டி உள்ளது.

## பரிஷத்தின் நோக்கம் :

'விஸ்வ ஹிந்து பரிஷத்' சமய வேறுபாடும் மொழி வேறுபாடும் கடந்த ஒரு பேரியக்கமாக வளர்ந்துவருகிறது. இந்தியப் பெரு

நாட்டில் மொழியாலும் இனத்தாலும் கலாசாரத்தாலும் வேறுபட்ட மக்கள் பலர் இருப்பினும், ' இந்தியன் ' என்ற பெயரில் ஒன்றுபட்டு வேற்றுமையில் ஒற்றுமையாக வாழ்கிருர்கள். அதே போலச் சைவம், வைணவம் போன்ற பல சமயப் பிரிவுகள் இருப்பினும் ' இந்து ' எனும் பெயரில் சமய நம்பிக்கையுடையோர் ஒன்றுபடுவதும் அதன் வழி சமயத்திற்கும் நாட்டுக்கும் நல்லது தேடுவதும் இவ்வியக்கத்தின் நோக்கங்களாக இருப்பதை அறிந்து பாராட்டுகிருேம்.

## சமய வேறுபாட்டின் அடிப்படை :

சமயப்பிரிவுகளின் அடிப்படையை நன்ருகப் புரிந்துகொள்ளுதல் தக்கது. சமயப் பிரிவு என்பது மாறுபட்ட கருத்து என்பது பொருள் அல்ல; வேறுபட்ட வழி என்பதே அதன் விளக்கமாகும் உதாரண மாகச் சென்னைக்குச் செல்லும் பயணிகளில்சிலர் ஒருவழியாகவும் வேறு சிலர் மற்ருெருவழியாகவும் செல்லுகின்ருர்கள் என்ருல் முரண்பட்ட வர்கள் என்ரு பொருள் ? அவரவர்களின் வசதிக்கேற்பவும் தகுதிக் கேற்பவும் செல்லுதலே கருத்து என்பதைப்போல, சமயப் பிரிவுகளும் அவரவர்களின் தகுதிக்கேற்பவும் விருப்பத்திற்கேற்பவும் பரந்துபட் டனவாக உள்ளன. காவிரியாறு புறப்படும் இடத்தில் ஒன்ருய் இருந்து ஆங்காங்கேயுள்ள மக்களின் வசதிக்கேற்பப் பற்பல வாய்க் கால்களாகவும் சிறுநதிகளாகவும் பிரிவதும் பின்னர் கடலில் புகும் இடத்தில் ஒன்ருகிச் சேர்வதும் கண்கூடாகத் தெரிவதாகும். அதே போல வேதம் எனும் ஒன்றிலிருந்து புறப்பட்ட கடவுள்கொள்கை ஆங்காங்கேயுள்ள மக்களின் கருத்தால் பிரிந்தும் பின்னர் கடவுளை அடைதலில் ஒன்றுபட்டும் இருக்கும் நிலையினைப் புரிந்து கொண்டால் சமயப் பூசல்கள்வர நியாயம் இல்லை. அதனுல்தான் மணிவாசகர் ' ஏகன் ' என்றும் ' அநேகன் ' என்றும், இறைவனை விளக்கியருளுகிருர். திருமூலரும் இக்கருத்தில்தான், 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் ' என்றருளுகின்ருர். உபநிடதமும் ' ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி ' என்று கூறுகிறது.

## தனி ஒருவன் — யார் ?

இங்ஙனம் சமயப் பொதுநோக்கில் அமைந்துள்ள இவ்வியக்கம் தன் நோக்கமாக, திருக்கோயில்களின் வருமானம் பெருகவும், இறை வழிபாடும் இறைபணியாளர்களின் வாழ்க்கையும் வளம் பெறவும் உரிய ஆக்கபூர்வமான பணிகளைச்செய்துவருவது என்பதைக் கொண் டுள்ளது. ஒரு நாட்டில் திருக்கோயில்களில் நடைபெறும் வழிபாடுகள் தடைப்படுமானுல் நல் வளமும் நற்குணமும் குறைந்து நாடு சீரழியும் என்னும் கருத்தைத் திருமூலர்,

" முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளம் குன்றும்
கன்னம் களவு மிகுத்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே "

என்று அருளிச்செய்கின்றார். இச்சமயத்தில் பாரதியார் பாடியுள்ள பாடலின் வரியொன்று நினைவுக்கு வருகிறது. அது 'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்பதாகும். இவ் வரிக்குப் பலரும் சொல்லும் உரையாவது, தனி மனிதனுக்கு உணவு இல்லை எனில் இவ்வுலகத்தையே அழித்திடுவோம் என்பதாகும். இவ்வுரை பொருத்தம் இல்லை. 'தனி ஒருவன்' என்று பாரதியார் சுட்டியுள்ளது இறைவனையே ஆகும். ஒருவன் எனும் சொல் இறைவனையே குறிக்கும் என்பது முன்னோரின் வழிவழி வந்த கருத்தாகும். 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' என்னுமிடத்திலும் ஒருவன் எனும் சொல் ஆண்டவனையே குறித்தல் காணலாம். இறைவன் ஒருவனே தனி ஒருவனாக இருப்பவன். 'ஏகக: வசீ சர்வபூ தாந்த ராத்மா' என்று இறைவனை உபநிடதம் ஒருவன் என்றே கூறுவது இங்கு ஒப்புநோக்கத்தக்து. எனவே தனி ஒருவனும் இறைவனுக்கு உணவில்லை எனில் அதாவது நிவேதனம் (அறிவித்தல்) செய்து அனுபவியாவிடில் இவ்வுலகம் அழிந்துவிடும் எனும் கருத்திலேதான் பாரதியார் கூறினார். அவர் தமது ஆன்மீக உணர்வின் அழுத்தம் காரணமாக 'அழித்திடுவோம்' என்கின்றார் பாரதி ஆன்மீக உணர்வுடையவர் என்பதற்கு அவர் பாடிய பாடல்கள் பலவும் சான்றாக உள்ளன. " பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்; பரிபூரணனுக்கே அடிமைசெய்து வாழ்வோம்' " பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம் " என்பன போன்ற வரிகளைக்காணலாம்.

## பிச்சை எடுக்கவா பிறந்தோம்?

இதே போன்று திருவள்ளுவர் எழுதிய குறளொன்றுக்கும் இன்று வேறுவிதமாக உரை கூறி வருகின்றனர். " இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து கெடுக உலகு இயற்றியான் " என்னும் குறளின் உண்மை உரை என்ன என்று பார்ப்போம். ஆண்டவன் யாரையும் பிச்சையெடுத்துப்பிழைக்கவிடவில்லை நீர், நிலம் போன்ற வளங்களைத் தந்தும், அவற்றைப்பயன்படுத்தி உயரக் கை, கால் போன்ற உறுப்புக்களைக் கொடுத்தும் உழைத்துப் பயன்பெற்று மதிப்போடு வாழவே படைத்துள்ளான். அதை மறந்தும், உதாசினம் செய்தும் பிச்சை எடுத்துப் பிழைப்பது என்பது படைப்புக்கு நேர்மாறான தொழில் ஆகும் என்னும் பொருளில்தான் வள்ளுவர் விளக்குகிறார். இங்கு 'இரந்தும்' என்ற உம்மையால் இரக்க வேண்டிய நிலைமையில் நம்மை இறைவன் படைக்கவில்லை என்பது தெளிவாகிறது. பிச்சைக்

காரர்கள் செய்யும் அச்செயலின் இழிதகைமையின்மேல் வந்த கோபத்தைப் படைத்தல் தொழிலியற்றும் கடவுள்மீது காட்டிக் 'கெடுக உலகியற்றியான்' என்கின்றார் திருவள்ளுவர்.

## தனித்தியங்கும் மன்றம் வேண்டும் :

இங்ஙனம் உழைத்து உண்ணும் மனமும் இறைவனுக்குப் படைத்து உண்ணும் குணமும் கொண்டு வாழ்ந்தால் அதுவே வாழ்வு எனப்பெறும்; அத்தகையோர் வாழும் நாடு நலம் பெற்றுத் திகழும். எனவே அல்லலின்றி மக்கள் வாழ அரசாங்கம் திருக்கோயில்களையும், அக்கோயில்களை நம்பி வாழும் இறைபணியாளர்களையும் வளத்தோடு வைத்திருக்கவேண்டியது இன்றியமையாதது. அதற்கு இப்பொழுதிருக்கும் நிலையில் அரசாங்கம் செய்யவேண்டியது, 1953 க்கு முன் இருந்ததுபோல இப்போதுள்ள இலாகாவை இந்து அறநிலையப் பாதுகாப்பு மன்றமாக, தன்னாட்சி உள்ளதாக மாற்றியமைத்துச் செயல்படுவதேயாம். அது அரசுக்கும் அறநிலையங்களுக்கும் நன்மையைப் பயப்பதாகும். தனித்தியங்கும் தன்னாட்சி பெற்ற பல்கலைக்கழகங்கள் போலவும், அப்பல்கலைக் கழகங்களிலிருந்தும் தன்னாட்சியுடன் திகழும் சில கல்லூரிகளைப் போலவும் முழு உரிமையுடன் இயங்க வழிசெய்தால் நாடும் சமயமும் நன்மை பெறும் திருக்கோயில்களைச்சார்ந்த எந்தப்பிரச்சனையும் அந்த மன்றத்தின் வழி முறையிடவும் அதன்வழி அரசு குறைதீர்க்கவும் எளிதாகும். இம் மன்றத்தை அரசு மேற்பார்வையிடுதல் வேண்டத்தக்கதே. ஆதலின் அரசு இதனைச் சிந்தித்து ஆவன செய்தல் நல்லது

## மதமாற்றம் நிகழும் காரணம் :

இன்று பல இடங்களிலும் தினத்தாள்களிலும் காணப் பெறும் செய்தி மதமாற்றம் பற்றியது. மதமாற்றம் நடைபெறுதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று அறியாமை ; பிறிதொன்று வறுமை. இன்று பலரும் வறுமையே இதற்கு முக்கிய காரணம் என்கின்றனர் வறுமையும் ஒருகாரணமாக உள்ளது ; அவ்வளவே. நல்ல வசதி படைத்தவர்களும் பல பெண்களை மணம் செய்துகொள்ளுவதற்கு வசதியாகப் பிறமதம் மாறும்நிலை நாட்டில் உள்ளது. மதமாறும் மக்கள் இரண்டு தவறுகளைச் செய்கிறார்கள். ஒன்று, இதுநாள்வரை இருந்த மதத்திற்குத் துரோகம் செய்வது; பிறிதொன்று, சென்று சேரும் மதத்திலும் உண்மையான கொள்கைவழி ஈடுபாடு இல்லாமையால் வெறும் ஆட்கூட்டத்திற்குமட்டும் பயன்படும் வகையில் இருப்பது. ஆதலின் இவர்கள் எங்கிருந்தாலும் பயனில்லை. எனினும் நல்லவர்கள் மதம் மாறினால் அதைத் தவிர்க்க முயற்சி செய்யலாம்.

மதம் என்ற பெயரால் மாசு ஏற்படுத்துவோரை இனம் கண்டுபிடித்து நீக்கவும் நல்லோரைச் சேர்க்கவும் இதுபோன்ற இயக்கம் பயன் படுதல் நல்லது.

'விஸ்வ ஹிந்து பரிஷத்' நடத்தும் இந்த மாநாடு சிறப்புற நிகழவும், இதில் கலந்துகொள்ளும் அன்பர்கள் பலரும் நலம்பலபெற்று நீடுவாழவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வாழ்க இந்துமதம்!

வளர்க தொண்டுநெறி!!

# பொங்கல் வாழ்த்து



புலவர். திரு. இரா. செல்வக்கணபதி, எம். ஏ.

வயலோரம் செந்நெல்லின் வாரி பொங்க,
வரப்பெல்லாம் மஞ்சளொடு இஞ்சி தங்க,
கயற்கண்ணிக் கூடலிலே தமிழே பொங்க,
கன்னிமொழி உலகத்தார் நெஞ்சில் தங்க,
மயலகன்று தமிழ்மக்கள் வாழ்வு பொங்க,
மனையெல்லாம் மங்கலங்கள் மலிந்து தங்க,
நயத்தக்க பண்பாடு எங்கும் பொங்க,
நடந்துவந்த தைப்பாவாய் வணங்கு கின்றோம்!

மங்கலங்கள் வாழ்வெல்லாம் மலர்ந்து பொங்க,
மான்விழியார் மணங்கொண்டு மகிழ்வில் தங்க,
எங்கெங்கும் சிவனருளே எழுந்து பொங்க,
ஏழையர்கள் வாழ்வெல்லாம் இன்பம் தங்க,
பொங்குமிளஞ் சிறுவரெல்லாம் மகிழ்ந்து பொங்க,
பூரிப்பால் இறையருளில் உலகம் தங்க,
மங்கலத் தைப் பாவைமகள் வந்தாள் வாழி!
மாசகற்றி நின்றவளே! வருக! வாழி!

## கடிதங்கள்

"தமிழ் வளர்க்கும் தருமபுரம் என்னும் நூலை உலகத் தமிழ்மாநாட்டில் அன்பளிப்பாக அளித்தமைக்குத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கட்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

"சைவ மடங்களின் தோற்றம்" மிகச் சிறந்ததோர் ஆராய்ச்சிக் கட்டுரை. தேவாரப்பாடல்களுக்கு உரைவெளியிட்டதும், திருக்குறள் உரைகளை வெளியிட்டதும் ஈடு இணையற்ற பணியாகும்.

சிவபோகசாரத்திலிருந்து தந்துள்ள "என்னை அறிவென்றான்" என்ற திருப்பாடலும், முத்திநிச்சயத்திலுள்ள "அண்ணலைப்போல் ஆனந்தம்" என்று தொடங்குப் திருப்பாடலும் உள்ள இருளை நீக்குவனவாக உள்ளன.

அருணாசலக் கவிராயரையும், முத்துத்தாண்டவரையும் தருமை ஆதீனம் போற்றியுள்ளமையறிந்து இசைவாணராகிய எம்மனோர்க்கு இறும்பூதெய்துகின்றது,

டாக்டர் எஸ். இராமநாதன்,
(ஓய்வுபெற்ற) முதல்வர்,
மதுரைப் பல்கலைக் கழக இசைக் கல்லூரி.

❋

* என்குமாரன் அட்வகேட் R. குமரராஜாவின் பெண்குழந்தை உடல் நலம் சரியில்லாமல் இன்னவியாதி என்று டாக்டர்களால் கண்டுபிடிக்க முடியாமலிருந்து, திருச்சேறையை அடுத்த இஞ்சிக் கொல்லை ஸ்ரீ குஞ்சிதபாதம் அய்யர் அவர்களிடம் பெண்குழந்தையின் ஜாதகத்தைக் காண்பித்ததில், திருக்கடவூர் ஸ்ரீ காலசம்ஹார மூர்த்திக்கு 'மிருத்யுஞ்சயஹோமம்' செய்யும்படிச் சொன்னார்கள். அதன்படி திருக்கடவூரில் செய்தோம். செய்த மூன்றுமாதகாலத்தில் குழந்தை பரிபூரண வளர்ச்சியடைந்து இப்போது நல்ல நிலைமையில் இருக்கிறது. மகிழ்ச்சியாகவும் இருக்கிறது.

V. இராமச்சந்திர நாயுடு
திருபுவனம்

(96 ஆம் பக்கத் தொடர்ச்சி)

மார்கழிமாதம் 17-ம்நாள் (1—1—81) திருவாரூர் ஸ்ரீவன்மீகநாத சுவாமி திருக்கோயில், 18-ம்நாள் திருக்கருப்பறியலூர் (தலைஞாயிறு) ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவரசுவாமி திருக்கோயில், 19-ம்நாள் மாயூரம் வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவரசுவாமி திருக்கோயில், 20-ம் நாள் கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி திருக்கோயில், மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமி திருக்கோயில், 21-ம் நாள் குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி திருக்கோயில். 22-ம்நாள் வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயில், ஆச்சாள்புரம் (திருநல்லூர்ப்பெருமணம்) ஸ்ரீ சிவலோகத்தியாகர் திருக்கோயில், 23-ம் நாள் திருக்குவளை (திருக்கோளிலி) ஸ்ரீ பிரமபுரீசுவரர் திருக்கோயில், திருக்காறாயில் ஸ்ரீ கண்ணாயிரநாதர் திருக்கோயில், 24-ம் நாள் திருப்பறியலூர் ஸ்ரீ வீரட்டேசுவரர் திருக்கோயில், 25-ம்நாள் திருநெடுங்களம் ஸ்ரீ நித்தியசுந்தரர் திருக்கோயில், திருக்கற்குடி ஸ்ரீ உஜ்ஜீவநாதர் திருக்கோயில், திருச்சிராப்பள்ளி ஸ்ரீ தாயுமானேசுவரர் திருக்கோயில். (தொடரும்)

## மாயூரம் பகவத்கீதை பேருரை நிறைவு விழாவில்

மாயூரம் தேசிய உயர்நிலைப்பள்ளியில் திரிமூர்த்தமலை ஸ்ரீ சநாதன அவர்களால் 19—12—80 முதல் பத்துநாட்கள் தொடர்ச்சியாக நடைபெற்றுவந்த பகவத்கீதை பேருரை நிறைவுவிழா 28—12—80 ஞாயிறு அன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி பேருரை நிகழ்த்திய ஸ்ரீ சநாதன அவர்களைப் பாராட்டி, பகவத்கீதையைப் படிப்பதாலும் படித்த அறிஞர்கள் நிகழ்த்தும் விரிவுரைகளைத் தொடர்ந்து கேட்பதாலும் அடையும் பயன் பகவத்கீதை கூறும் அரிய உண்மைகளை மனத்தில் ஏற்றுக்கொண்டு அதனை வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகுவதே என்பதை விளக்கி ஆசியுரை வழங்கியருளினார்கள்.

## விஸ்வ ஹிந்து பரிஷத்
## தஞ்சைமாவட்ட இந்து மாநாடு

விஸ்வ ஹிந்து பரிஷத் மாயூரம் கிளையின் சார்பில் ஜனவரிமாதம் 3, 4 சனி ஞாயிறு ஆகிய இருநாட்களும் தஞ்சைமாவட்ட இந்து மாநாடு மாயூரம் ஏ வி ஸி. புதியதிருமணமண்டபத்தில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஆங்காங்குள்ள பரிஷத்தின் பிரதிநிதிகளும் மற்றும் அன்பர்களும் கலந்துகொண்டனர். தொடக்கநாளன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி விழாவைத் தொடங்கிவைத்து ஆசியுரை வழங்கினார்கள். திருப்பனந்தாள்

ஸ்ரீ காசிமடம் ஸ்ரீமத் காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள், பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க இராமசாமி அடிகள், சிரவணபுரம் ஸ்ரீ சுந்தர சுவாமிகள், வெள்ளிமலை ஸ்ரீ மதுரானந்த சுவாமிகள், மதுரை ஸ்ரீ யோகாநந்தகிரி சுவாமிகள், திரிமூர்த்திமலை அருட்செல்வர் சனாதனு, சுகப்பிரம்மம் ஸ்ரீ இராமசாமி சாஸ்திரிகள், புதுக்கோட்டை ஸ்ரீ சிவ பிருந்தாதேவி அம்மையார் மற்றும் உள்ள அறிஞர்கள் பலர் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினர்கள், மாலை அறிஞர்களின் சமயச் சிறப்புச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இரவு கலைநிகழ்ச்சி சிறப்பாக அமைந்திருந்தது.

4—1—81 காலை பிரதிநிதிகள் அவை கூடிற்று. மதமாற்றம். இலக்கியமும் இந்துமதமும், சமயமும் சமூக சேவையும். சன்னியாசமும் சமூகசேவையும் என்ற தலைப்புக்களில் அறிஞர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். அடுத்து; 11 மணிக்கு ஸ்ரீ சிவ பிருந்தாதேவி அவர்கள் தலைமையில் மகளிர் மாநாடு. அதன்பின் இயக்கத்தின் அமைப்பைப்பற்றியும் செய்யும் செயல்பற்றியும் பலர் கருத்துரை வழங்கினர். மாலை திருமுறைநூல்கள். சிவாகமநூல்கள். ஏட்டுச்சுவடிகள் இவைகள் யானைமீது அலங்கரிக்கப் பெற்றுத் திருமுறைகள், திருப்பாசுரங்கள், அருட்பாக்கள் இவைகளை இசைவாணர்கள் பாராயணம் செய்ய அன்பர்கள் கூட்டமாக உடன்வர, திருவுலாக்காட்சி தொடங்கிற்று. இக்காட்சி மாயூரம் நகரப் பூங்காவில் நிறைவெய்தப் பெற்று, சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் தலைமையில் இந்துமத வளர்ச்சிக்கு மக்களும் அரசும் செய்யவேண்டிய கடமைகளை சமயத் தலைவர்களும் அன்பர்களும் விளக்கிப் பேசினர்கள். மாயூர நகரிலே இதுவரை இதுபோல் சமய மாநாடு நடந்ததில்லை என்று அனைவரும் சிறப்பாகப் பேசும் வகையில் – எண்ணி மகிழும்வகையில் இம்மாநாடு நடைபெற்றது.



---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Amirthagateswaraswamy Devasthanam Tirukkadaiyur.

A great Temple Indeed.

(S-d) H. V. Hande

4—12—80. Minister to Govt. of Tamilnadu

தருமையாதீன வெளியீடு :

# GURU JNANA SAMBANDHAR

## THE PHILOSOPHER INSPIRED BY MADURAI

---

தருமையாதீனத்தை இற்றைக்கு 450 ஆண்டுகளுக்குமுன்பு தோற்றுவித்த பேரருளாளர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். இவர்கள் பாண்டியநாட்டு ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதரித்தவர்கள். மதுரைத் திருக்கோயிலில் உள்ளுணர்வு கைவரப்பெற்று ஸ்ரீ சொக்கநாதப் பெருமானைப் பூஜாமூர்த்தியாக அடையப் பெற்றவர்கள் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசரை ஞானாசிரியராகப் பெற்று, தருமையில் திருமடங் கண்டு, மெய்கண்ட சந்தானம் வழிவழியாகச் சிறந்துவர வழிகண்டருளியவர்கள். இவர்கள் வாழ்வு அருளற்புதங்கள் நிறைந்தபெருமிதம் மிக்கது. இவர்கள் வாக்கு சைவசித்தாந்த சாத்திர நெறிக்குப் புதிய வளங்களைச் சேர்ப்பது. இவர்கள் வாழ்வையும், வாக்குகளில் சிலவற்றையும் திருச்சிற்றம்பலம் தமிழ் இலக்கிய வரலாற்றுப் பேராசிரியர். திரு மு. அருணாசலம் எம். ஏ. அவர்கள் ஆங்கிலத்தில் அழகுறத்தந்துள்ளார்கள். இந்நூல் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் அழகுற அச்சிடப்பெற்று மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் பங்கேற்ற பன்னாட்டு ஆராய்ச்சி அறிஞர்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்பெற்றது. சைவ சமயம் பற்றிய விரிவான முன்னுரையோடு ஆதீன வரலாற்றினையும் சுருங்கக்கூறுவது.

ஆதீன வெளியீடு எண் 773. கிரௌன் 1X8. பக்கங்கள் 130. இந்நூலின் அடக்கவிலை ரூ. 5-00. ரெக்கார்டெட் டெலிவரிஉள்பட அஞ்சல் செலவு ரூ 1-25. நூல் வேண்டுவோர் மேலாளர், ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம், மாயூரம் அஞ்சல், 609 001. என்ற முகவரிக்கு M. O. மூலம் தொகை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

# திருக்கொண்டீச்சரம், திருப்பனையூர், திருவிற்குடித் தலச் சிறப்பு

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசக உரைமணி,

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம், ஏ.,**

தஞ்சைமாவட்டம் நன்னிலம் தாலுக்காவில் இம் மூன்று திருத் தலங்களும் உள்ளன. சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங் களில் 72, 73, 74 தலங்களாக இவை எண்ணப்பெறும். திருக் கொண்டீச்சரம் அப்பர் அருளிய இரண்டு திருப்பதிகங்களையும், திருப்பனையூர் ஞானசம்பந்தர் சுந்தரர் ஆகியோர் அருளிய இரண்டு திருப்பதிகங்களையும், திருவிற்குடி ஞானசம்பந்தர் அருளிய ஒரு திருப் பதிகத்தையும் பெற்றவை.

## 1. திருக்கொண்டீச்சரம்

இத்தலம் நன்னிலம் புகைவண்டிநிலையத்திற்கு மேற்கே 3. கி.மீ. தூரத்தில் உள்ளது. பேருந்தில் செல்வதேஎளியவழி. சன்னாநல்லூரி லிருந்து நன்னிலம் செல்லும் பேருந்துச்சாலையில் தூத்துக்குடி பிள்ளையார்கோயிலில் இறங்கி முடிகொண்டான் ஆற்றின் தென் கரையை அடைந்தால் திருக்கொண்டீச்சரத்தைத் தரிசிக்கலாம். மாயூரத்திலிருந்தும் நன்னிலத்திலிருந்தும் இவ்வழியில்வரும் பேருந்து கள் நிரம்ப உள்ளன. இத்தலத்தின் மறுபெயர் வில்வாரண்யம் என்பதாகும்.

**தலப்பெருமை :**

காமதேனு வழிபட்டதலம். உமையம்மை பசுவடிவாய் இறை வனைத் தேடிக்கொண்டு கொம்பினால் பூமியைக் கிளறிவரும்போது இத்தலத்தின் சிவலிங்கத்தின் தலையில் கொம்புபட்டு உதிரம் வருதலைக்கண்டு, இறைவி அஞ்சிவருந்தித் தன்பாலையே சிவலிங்கத் தின் முடிமீது சொரிந்து காயத்தை ஆற்றி வழிபட்டதாக வரலாறு. சிவலிங்கத்தின் பாணத்தில் பசுவின் கொம்புபதிந்த வடு ஆழமாக இருக்கிறது. இத்தலத்தின் கோயிலைச்சுற்றி அகழி இருக்கிறது. க்ஷீரபுஷ்கரிணி என்பது தீர்த்தத்தின் பெயர்.

**கோயிலமைப்பு :**

முடிகொண்டான் ஆற்றின் தென்கரையில் கோயில் அமைந்து உள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி மூன்றுபக்கமும் அகழியால் சூழப்பெற்ற அரியகோயில். தீர்த்தக்கரையில் விநாயகர் இருக்கிறார். கோயில் வாயிலில் இராஜகோபுரம் இல்லை கட்டைக்கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றதும் நாயக்கர் மண்டபமும் முன்மண்டபமும் இணைந்துள்ளன. நாயக்கர் உருவச்சிலைகள் மண்டபத்தில் உள்ளன. கன்னி மூலையில் விநாயகரும் மேற்கே முருகனும், வாயுமூலையில் மகாலட்சுமியும் உள்ளனர். வடக்குப் பிராகாரத்தில் சண்டேசர் கோயில் உள்ளது. கிழக்கே சூரியர் சந்திரர் பைரவர் எழுந்தருளி யுள்ளனர். முன்மண்டபத்தில் சந்நிதி தெற்குநோக்கி உள்ளது. முன் மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றதும் மகாமண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் தூணில் விளங்கும் சுரஹரேசுரர் உருவச்சிலை அருமையும் பெருமையும் உடையது மூன்று கால்களோடு விளங்கும் இக்கடவுளைப் பலரும் சுரம் முதலிய நோய்தீரப் பிரார்த்தனை செய்து வழிபடுகின்றனர். அம்பிகை பசு உருவாய்ப் பூசித்த ஐதிகச் சிற்பமும் தரிசிக்கத் தக்கது. சுவாமி சந்நிதியில் விளங்கும் துவாரவிநாய கரைத்தரிசித்து இறைவரை வழிபடுவோம்.

**மூர்த்திகள் :**

சுவாமிபெயர் அருள்மிகு பசுபதிநாதர். அம்பாள்பெயர் அருள்மிகு சாந்தநாயகி.

**தீர்த்தம் :** க்ஷீரபுஷ்கரிணி

**தலமரம் – வில்வம்.**

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயிலில் சகம் 1439 இல் ஏற்பட்ட விசயநகர வேந்தராகிய வீரகிருஷ்ணதேவராயர் கல்வெட்டு ஒன்று இருக்கின்றது. அது கிருஷ்ணதேவராயர் உதயகிரிகோட்டையைக் கைப்பற்றியதையும் அக்கோட்டையில் இருந்த திருமலைராகுத்தராயரைச் சிறைபிடித்ததை யும் குறிக்கின்றது.

## 2. திருப்பனையூர்

**இத்தலம் சன்னாநல்லூரிலிருந்து ( நன்னிலம் செல்லாமல் ) ஆண்டிப்பந்தல் செல்லும் வழியில் உள்ளது. திருப்பனையூர் பேருந்துச் சாலையிலிருந்து கிழக்கே 2. கி. மீ. தூரம் ஆகும். பேருந்துச் சாலையில்**

திருப்பனையூர் வழிகாட்டியில் இறங்கிச்செல்லவேண்டும். சாலைவசதி உண்டு.

**தலப்பெருமை :**

தாலவனம் என்பது இத்தலத்தின் வடமொழிப்பெயர். பனை மரத்தைத் தலமரமாகக் கொண்டவை பனையூர் பனந்தாள் பனங் காட்டூர் முதலியனவாகும். ஆண்பனை பெண்பனை ஆகிய இருமரங்கள் இணைந்து தாமே வளர்ந்துவரும் அற்புதத்தை இத்தலத்தில் காணலாம். 'திருப்பனையூரில் விருப்பனுகியும்' என்று மணிவாசகரும் இத்தலத்தைப் போற்றி உரைக்கிருர். சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப் புகலூர் இறைவனிடம் பொன் பெற்று மீண்டுவரும்போது இத்தலத் தின்புறத்தே இறைவன் திருக்காட்சி காட்டியருளினுர் என்பது பெரியபுராணவரலாறு. 'அரங்காட வல்லார் அவரே அழகியரே' என்று தேவாரத் திருப்பதிகத்தில் சுந்தரர் இறைவனது ஆடற்காட்சி கண்டதை எடுத்தியம்புகிருர். பராசர முனிவர் வழிபட்டதலம். கரிகாற் சோழன், முசுகுந்தன், மகாலட்சுமி முதலியோர் வழிபட்டதலம்.

**கோயிலமைப்பு :**

கிழக்குநோக்கிய சந்நிதி. கோயிலுக்குமுன்னுல் தீர்த்தம்உள்ளது. அண்மையில் திருப்பணிகள் செய்யப்பெற்றுப் பொலிவோடு திகழ் கிறது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. முதல்வாயிலைக் கடந்ததும் வெளிப் பிராகாரம். இங்கு அருள்மிகு பெரியநாயகியம்மை தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வாயிலில் துணையிருந்த விநாயகர் கிழக்குநோக்கி விளங்குகிருர். கரிகாற்சோழன் தாய்வயிற்றிலிருந்த போதே தந்தை இளஞ்சேட்சென்னியை இழந்து அரசுரிமைக்குரிய திருவோடு பிறந்து தன் தாய்மாமனுகிய இரும்பிடர்த்தலையார் என்னும் சங்ககாலப் புலவர் தாயத்தாரின் பகைமை காரணமாகக் கரிகாலனுக்கு இடையூறு வாராமல் பனையூரில் கொண்டுவந்து ஆதரித்து வளர்த்தார். எட்டுவயதுவரை இத்தலத்தில் வளர்ந்த அச் சோழமன்னனுக் குத் துணையிருந்து காத்தருளினுர் இவ்விநாயகர் ஆதலின் இவர் கரிகாற்சோழனுக்குத் துணையிருந்த விநாயகர் எனப் பெற்ருர்.

அம்பாள் கோயிலுக்கு அருகில் தலமரம் ஆண் பெண்வடிவில் பெரியதும் சிறியதுமாகப் பெருமிதத்தோடு வளர்ந்துவருகிறது. இவை விதையிடாமலே தலைமுறை தலைமுறையாக வேரிலே பிறிதொன்று இணைந்து பிறந்து பல பிணிகளையும் போக்கும் கற்பகமாக வளர் கின்றன. பனைமரத்தினடியில் பழமையும் பெருமையும் உடைய விக்ரகங்கள் உள்ளன.

இரண்டாவது வாயிலைக்கடந்து சென்றால் முதல்பிராகாரம். கொடிமரம் நந்திபலிபீடங்கள் சுவாமிசந்நிதியில் உள்ளன. தென் மேற்கு மூலையில் மாற்றுரைத்த விநாயகர் உள்ளார். திருப்புகலூரில் சுந்தரர் தாம்பெற்ற பொன்னை மாற்றுரைத்துக் காணத்துணை செய்த தால் இப்பெயர் பெற்றார்.

மேற்கே முருகன்கோயில் உள்ளது. அடுத்து திருப்புகலூர், திருப் பயிற்றங்குடி, திருவிற்குடி, திருவாஞ்சியம், நன்னிலம், திருக் கொண்டீச்சரம், அம்பர்மாகாளம் ஆகிய ஏழு தல இலிங்கங்கள் உள்ளன. வடமேற்கே கஜலக்ஷ்மி கோயில் உள்ளது. வடக்கே பராசரர் பூசித்த தாலவனேசுவரர் கோயிலும், அடுத்து சண்டேசுவரர் கோயிலும் உள்ளன.

கிழக்கே பைரவர் நவக்கிரகங்கள் உள்ளனர். சுவாமி மண்டபத் தின் கோஷ்டங்களில் தெற்கே பராசர முனிவரும் அடுத்து தக்ஷிணா மூர்த்தியும் உள்ளனர். மேற்கே திருமாலும் வடக்கே நான்முகனும் துர்க்கையும் உள்ளனர்.

வலம்வந்து சுவாமிசந்நிதியை அடைவோம். திருவோலக்கமுன் மண்டபத்தைக் கடந்து நாம் மகாமண்டபத்திற்குச் சென்றதும் நடராசரையும் மற்றும் பஞ்சமூர்த்திகளையும் தரிசிக்கலாம்.

சுவாமிவாயிலில் விளங்கும் விநாயகரைவழிபட்டு பனையூர் நாதரை வழிபடுவோம். சுவாமி சுந்தரர் 'அழகியர்' என்று அருளுவதற்கு ஏற்பச் சுந்தரநாதராக விளங்குகிறார். அம்பாள் கோயில் அழகிய முன் மண்டபத்தோடு விளங்குகிறது. கருணை பொழியும் திருநோக்கோடு விளங்குகிறாள். அம்பிகை பெரியநாயகி

**மூர்த்திகள் :**

சுவாமிபெயர் அருள்மிகு சௌந்தரேசுவரர். அம்பாள்பெயர் அருள்மிகு பெரியநாயகி, தீர்த்தம் – பராசரதீர்த்தம், அமிர்த புஷ்கரணி, மகாலக்ஷ்மி தீர்த்தம். தலமரம் – பனை.

இத்தலத்தில் விளங்கும் சோமாஸ்கந்தரின் கையில் மாங்கனி உள்ளது. இங்குள்ள திரிபுராந்தகமூர்த்தி அழகும் கலைச் சிறப்பும் கொண்ட திருமேனியோடு காட்சிதருகிறார்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் பனையூர்நாட்டின் தலையூராக விளங்கியது எனக் கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. சோழமன்னர்களில் இராச ராசன், இராசேந்திரன், குலோத்துங்கனின் சிறப்புப்பெயர்களோடு

இத்தலப்பெயர் குறிக்கப்படுகிறது. இக்கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் சுந்தரபாண்டியன், பராக்கிரம பாண்டியன், இராசாதிராசசோழன், குலோத்துங்கன் ஆகியோர் காலத்தன. இக்கோயிலுக்கு நிவந்தமாக நிலபுலன்கள் அளிக்கப்பட்ட செய்தியைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

## 3. திருவிற்குடி

இத்தலம் சன்னுநல்லூர் நன்னிலம் ஆகிய ஊர்களிலிருந்து திருவாரூர்செல்லும் பேருந்துவழிக்கு அருகிலுள்ளது. கங்களாஞ் சேரியில்இறங்கி கிழக்கே, 3 கி. மீ. தூரம்சென்ருல் இத்திருத்தலத்தை அடையலாம். மாயூரம் திருவாரூர் புகைவண்டித்தொடரில் விற்குடி இரயில் நிலயத்திலிருந்து கிழக்கே 2 கி மீ. தூரம் சென்ருலும் இத்தலத்தை அடையலாம்.

### தலப்பெருமை :

அட்டவீரட்டத்தலங்களில் இத்தலம் இறைவன் சலந்தரா சுரனைச் சம்ஹரித்த தலம். திருமால் பிருந்தையின்மேல் மையல் கொண்டு அவளைத் துளசியாக அடைந்த தலம். நாட்டுக்கோட்டை நகரத்தாருள் பள்ளத்தூர் சொ. மு அ. குடும்பத்தாரின் சீரிய கருங்கல் திருப்பணிகளைப் பெற்று அழகிய திருக்கோயிலாக மிளிர்கிறது. மக்கள் அனைவரும் விரும்பி வழிபடத்தக்கதலம்.

### அட்டவீரட்டம் :

இறைவனது வீரச்செயல்கள் வெளிப்பட்ட தலங்கள் எட்டு. அவற்றை வீரட்டத் தலங்கள் என்பர் ஆன்ருேர். அட்டவீரட்டத் தலங்களைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

பூமன் சிரம்கண்டி, அந்தகன் கோவல், புரம்அதிகை
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்
காமன் குறுக்கை, யமன்கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.

என்பது அப்பாடல். இறைவன் பிரமனின் சிரம் கொய்ததலம் திருக்கண்டியூர். அந்தகாசுரனைக் கொன்றதலம் திருக்கோவலூர். திரிபுரத்தை எரித்ததலம் திருவதிகை. தக்கனை வதைத்த தலம் திருப்பறியல். சலந்தராசுரனைக்கொன்றதலம் திருவிற்குடி. யானையை உரித்த தலம் வழுவூர். மன்மதனை எரித்ததலம் திருக்குறுக்கை. இயமனை உதைத்ததலம் திருக்கடவூர்.

அப்பர் அடிகளும் இத்தலங்களைக் குறிப்பிட்டு அருளிச் செய்துள்ளார்.

காவிரியின் கரைக்கண்டி வீரட்டானம்
கடவூர்வீரட்டானம் காமருசீர் அதிகை
மேவியவீ ரட்டானம் வழுவைவீ ரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டம், குறுக்கை வீரட்டம்
கோத்திட்டைக் குடிவீரட்டானம் இவை
நாவில்நவின் றுரைப்பவர்க்கு நணுகச்சென்றால்
நமன்தமரும் சிவன்தமர்என்று அகல்வர்நன்கே.

என்பது அவர் பாடல். இதனுள் குடி என்று குறிப்பிடப்படுவது விற்குடியையாகும்.

**கோயிலமைப்பு :**

கோயில் மேற்குநோக்கி உள்ளது. எதிரே சக்கர தீர்த்தம் உள்ளது. தீர்த்தக்கரையில் விநாயகர் கோயில் உள்ளது. ஐந்துநிலைக் கோபுரம் கோயிலுக்கு அழகு தருகிறது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. வெளிப்பிராகாரத்தின் கீழ்வாயிலில் திருமாலுக்காகப் பெருமான் பிருந்தையைத் துளசியாக எழுப்பிய இடமும் திருமால் வழிபட்ட சிவாலயமும் உள்ளன. கோபுரவாயிலைக் கடந்து உள்ளே சென்றால் இடதுபுறத்தில் அம்பாள்கோயில் உள்ளது. வலமாகவந்து விநாயகர் சந்நிதியை அடைவோம்.

மேற்குப் பிராகாரத்தில் விநாயகரை அடுத்து சோமாஸ்கந்தரும் மகாலக்ஷ்மியும் முருகனும் விளங்குகின்றனர். வடக்குப் பிராகாரத்தில் அம்பாள்கோயிலை அடுத்துப் பள்ளியறை உள்ளது. பிருதிவிலிங்கமும் பயிரவரும் நவக்கிரகங்களும் உள்ளனர் கிழக்குப்பிராகாரத்தில் சூரியனும் சந்திரனும் தெற்குப்பிராகாரத்தில் பிர்மாமுதலியமூர்த்திகளும் உள்ளனர். சுவாமி சந்நிதியின் நுழைவாயிலில் விநாயகர் முருகன் உள்ளனர். மகாமண்டபத்தில் நடராஜர், சலந்தராசுரனைச் சம்கரித்த மூர்த்தி, பஞ்சமூர்த்திகள் உள்ளனர். சுவாமி சந்நிதியில் துவாரவிநாயகரும் துவாரபாலகர்களும் உள்ளனர்.

அருள்மிகு வீரட்டானேசுரர் சந்நிதி மிக்க விளக்கமுடையதாய்த் திகழ்கிறது. அம்பாள் அருள்மிகு பரிமளநாயகியம்மை பேரழகோடு அருட்காட்சிதருகிறாள்.

**மூர்த்திகள் :**

சுவாமிபெயர் அருள்மிகு வீரட்டானேசுவரர். அம்பாள் பெயர் அருள்மிகு ஏலவார்குழலி. பரிமளநாயகி எனவும் வழங்கப்பெறுகிறார். தலமரம் துளசி. தீர்த்தம் சக்கரதீர்த்தம். எதிரில் உள்ளது. சங்கு தீர்த்தம் பின்புறம் உள்ளது. சலந்தரனைச்சங்கரித்த மூர்த்திகளின் கையில் சக்கரஆயுதம் உள்ளது.

## புராண வரலாறுகள்

**சலந்தரவதம் :**

கயிலை மலையோரம் கண்ணுதற் கடவுள் திருவுருமாறி நின்றிருந் தார். அப்பொழுது அங்குவந்த இந்திரன் "நீயார்?" என்று வினவினான். பரமன் பதில் சொல்லவில்லை. இந்திரன் அவசரம் அடைந்து சினந்து வச்சிரப்படையால் தாக்கினான். ஆயுதம் பொடி யாகியது. இந்திரனின் அவசரபுத்தியால் ஆண்டவன் சினந்து விஸ்வரூபம் எடுத்தார். இந்திரன் அஞ்சி நடுங்கி மன்றுளாடும் பெருமானின் திருவடிபற்றி மன்றாடினான். இறைவனின் சினம் தணிந்தது.

சினந்தபொழுது உண்டாகிய வியர்வைநீரை வழித்தெறிந்தார் ஈசனார். அது மேற்றிசைக் கடலில் வீழ்ந்து புத்திர வடிவாகியது. கடலரையன் அப்புத்திரனைத் தன் மகனாகக்கொண்டு வளர்த்தான். பிரமன் அப்புத்திரனுக்குச் சலந்தரன் என்று பெயர்சூட்டினான்.

சலந்தரன் காலநேமியின் மகள் "பிருந்தை" என்பாளை மணந்தான். தேவதச்சனாகிய மயனால் ஒரு நகரம் செய்வித்து அதில் வாழ்ந்தான்.

அவுணர்களின் சேர்க்கையினால் பல தீச்செயல்களை மேற் கொண்டான். தேவர்களுடன் போர் தொடுத்தான். திருமாலும் அவனிடம் தோற்றார். இதனால் அஞ்சிய இந்திரன் இறைவனிடம் தஞ்சம் புகுந்தான்.

இறுதியில் சலந்தரன் கயிலாத்தையே தாக்கவந்தான். மாற்றுருக் கொண்டு, இறைவன் எதிரில் வந்து "சலந்தரா!" நான் இறை வனுக்குச் சமமானவன், உனக்குச் சர்வ வல்லமை இருக்குமானால் இங்கே இப்பொழுது நான் காலால் கீறும்சக்கரத்தைச் சிரமேல்ஏற்றுத் தாங்குவாயா? என்றார். சலந்தரன் ஏளனமாகச் சிரித்தவாறு இசைந் தான். இறைவன், திருவடியால் தரையில் ஒரு சக்கரம் கீறினார். அதனைச் சலந்தரன் மார்பிலும், தோள்களிலுமாகத் தாங்கிச் சிரசின் மேல் கொண்டான். சக்கரம் அவனை இரு கூறுக்கி இறைவனிடம்

மீண்டது. அவனுடன் வந்த அசுரப்படை சாம்பராகியது. இவ்வீரச் செயலால் சிவன் "ஜலந்தரவத மூர்த்தி" என்னும் திருநாமம் உடையவரானார்.

இவ்வீர வரலாற்றைக் கந்தபுராணச் செய்யுட்கள் கூறுகின்றன.

"புங்கவர் யாரையும் புறங்கண் டேன், வரு
மங்கையை யடைத்தனன்; கார்கொள் வேலையில்
அங்கியை அவித்தனன்; அரியை வென்றனன்;
இங்கிது தாங்குவ (து) அரிய தோ என "

"புரத்தழல் கொளுவியோன் பொறித்த நேமியைக்
கரத்திடை எடுத்தனன்; கனம்கொண் டெய்தலின்
உரத்திடைப், புயத்திடை உயிர்த்துத் தாங்கியே,
சிரத்திடை வைத்தனன் தேவர் ஆர்க்கவே "

"செழுஞ்சுடர்ப் பரிதியைச் சென்னி கோடலால்
ஒழிந்திடு சலந்தரன் உச்சி யே, முதல்
கிழிந்தது முழுதுடல் கிளர்ந்து சோரிநீர்
இழிந்தது புவிதனில்; இழுமென் ஓசையால் "

ஜலந்தரவதம்செய்து இறைவன் காட்சிகொடுத்த வெற்றித்தோற்றத்தைக் காஞ்சிப் புராணம் கீழ்வருமாறு காட்டுகிறது.

" இருகூறுகச் சலந்தரனை இடுத்து மாட்டி அவ்வடிவம்
மருகே தோன்றச் சுதரிசன மங்கைத் தலத்தின் மிசைஏந்தி
முருகார் கடுக்கைத் தண்ணறும்பூந் தொடையில் வாகை முடி
[ விளங்கத்
திருவார் காட். அளித்தருளும் தேவர் கோமான் திருவுருவம் "

**பிருந்தை துளசியானது :**

திருமால் சலந்தராசுரன் இறந்தபின் அவன் மனைவி பிருந்தையை விரும்பி அவ்வசுரன் வடிவோடுசென்று அவளை அடைந்து இன்புற்றார். பிருந்தை திருமாலின் வஞ்சச்செயலை அறிந்து அவரைச் சபித்துத் தீயில் வீழ்ந்து உயிர்துறந்தாள். திருமால் பிருந்தை இறந்த சாம்பலில் வீழ்ந்து புரண்டார். தேவர்கள் வருந்திச் சிவபிரானிடம் விண்ணப்பித்தார்கள். அம்பிகை விதை ஒன்றைத் தேவர்கள் கையில் கொடுத்து அச்சாம்பலில் இடுமாறு பணித்தாள். அவ்விதை துளசியாக வளர்ந்து ஒரு பெண்வடிவாயிற்று. திருமால் அதை மார்பின்மீதும் முடிமீதும் அணிந்து மகிழ்ந்தார். திருமால் தனது செயலை எண்ணி வருந்தி இத் தலத்து இறைவனை வழிபட்டுப் பழிநீங்கினார்.

கட்டுரை எண். 12.

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Lit.'
D. P. P. A,. D. U. N. I. U,

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவது உன்மலர்த்தாள் எழுதா மறையின்
ஒன்றும் அரும்பொருளே ! அருளே ! உமையே! இமயத்து
அன்றும் பிறந்தவளே அழியா முத்தி ஆனந்தமே. (10)

அ எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே !

(1) எழுதப்படாத வேதத்தில் பொருந்தும் அல்லது 'வேதப் பிரதிபாத்யமான' பரம்பொருளே என அன்னையினை அழைக்கிறார்.

(2) ஒருவனைப்பற்றிப் புகழ்ந்து எழுதப்படும் நூலினுக்கும் அவனது பண்புகளுக்கும் சிறிதும் தொடர்பில்லாமலும் இருப்பது உண்டு. அப்புகழ்ச்சிக்குரிய உயர்வின்றி இருப்பின் நூலினுக்கும் நூலுடைத் தலைவனுக்கும் பொருத்தமின்றிப்போய்விடும். ஆனால் எழுதவொண்ணாச் சிறப்புடைய அன்னையோ எழுதா மறையுடன் ஒன்றிப் பொருந்தி உட்பொருளாய் நிற்கிறாள்.

(3) மந்திரவடிவாகி எழுதப்படாமல் "வேத அத்யானம்" என்னும் மனப்பாடத்தின்மூலமே மறைகள் நின்று நிலவிவருகின்றன. அம்மந்திரவடிவான மறைகளில் ஒன்றிநிற்கும் பழம்பொருள் அன்னையே.

(4) "எழுதாமறையும் விண்ணும் புவியும் புனலும் கனலும் வெங்காலும் அன்பர் கண்ணும் கருத்தும் நிறைந்தாய்" எனக் குமர குருபரர் சகலகலாவல்லிமாலையில் போற்றுகிறார்.

(5) எழுதப்படாதஒருநூலும், அதன்கண் கூறப்படும் தலைவியின் சிறப்பும் எங்ஙனம் உயர்வானதாகும் எனச் சிலர் எண்ணக்கூடும். எழுதப்பட்ட நூல்களில் விலக்கத்தக்கனபலவும் எழுதப்படாதவற்றில் ஏற்றங்கள் பலவும் இருத்தல் கண்கூடு. இங்கிலாந்துநாட்டு அரசிய லமைப்பு ( Constitution ) எழுதப்படாத ஒன்று என்பதும், மரபுகள்,

பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே அந்நாட்டு அரசியல் இயங்குகிறதென்பதும் நாம் அறிந்த ஒன்று. எழுதப்படாத அரசியல் சாஸனம் (Un written Constitution) எனப்படும் அம் முறையின் சிறப்புகள் பலவற்றினையும் உலகிலுள்ள அனைத்து நாடுகளும் பாராட்டுவதோடன்றி, அம்முறையின் 'அம்சங்கள்' பல வற்றை மற்ற நாடுகளும் தங்களுடைய அரசியலமைப்பில் சேர்த்துக் கொண்டுள்ளன. எழுதாமறை எங்ஙனம் உயர்ந்ததாகும் என்பதற்கே இவ்விளக்கம் தரப்படுகிறது.

## ஆ. அருளே !

(1) அருள் நிறைந்தவளை, அருளின் வடிவானவளை அருளே என அழைக்கிறார்.

(2) "பொன்னே ! மணியே ! பொருளே ! அருளே !" என அருணகிரிநாதர் கந்தரநுபூதியில் முருகனை அழைக்கிறார்.

(3) அருள் என்னும் பண்பு அதனைப் புரியும் அன்னைக்கு ஆகி வந்ததால் இதனைப் பண்பாகுபெயர் என்பர் இலக்கண நூலார்.

(4) ஆனால் அன்னையினை 'அருளே' என அழைத்ததில் உட்பொருளும் உண்டு. ஈசனின் அருளாற்றல்தான் சக்தியென்று சிவஞானசித்தியார் விளக்கும்.

" அருளது சத்தியாகும் அரன் தனக்கு " — சுபக்கம் 239.

(5) ஈசன் தன் அருளினையே உலக இயக்கத்துக்காகப் பெண்ணுருவாக்கித்தந்தான் என்பதனை,

" ஆனதன் அருளை ஆங்கோர் ஆயிழையாகநல்கி
மேல்திசழ் கருணைதன்னால் மேவுவது உணராய் "

என்று ததீசியுத்தரத்தின்வாயிலாகத் தட்சகாண்டத்தில் கந்த புராணம் விளக்குகிறது.

## இ. உமையே !

(1) அன்னையின் ஆயிரம் திருநாமங்களுள் சிறப்பான 'உமா' என்ற நாமத்தைக்கூறி அழைக்கிறார். அப்பெயரின் விளக்கத்தைப் பல ஆதாரங்களுடன் பாஸ்கரராயர் தெளிவாக்குகிறார். அவற்றினைக் காண்போம்.

(2) மலையரசனின் மகளாகத் தோன்றியபொழுது அன்னைக் கேற்பட்ட பெயர் உமா என்பதாகும். இறைவனைக் குறித்துத்

தவமியற்றச்சென்ற குழந்தையினை இமவான்மனைவி மேனை "தவமா! அப்பாடா! அது உனக்கு வேண்டாம்" என்றார். 'உ' என்பது விளியாகும். அல்லது "அப்பாடா! என்று பொருள் கொடுக்கும் வியப்புச் சொல்லாகும், 'மா' என்றால் வேண்டாம் என்று பொருள் படும் அதுவே 'உமா' என்றாயிற்று. பாஸ்கரராயரின் வியாக்கியானத்தை ஆங்கிலத்தில்தந்த ஸ்ரீ அநந்தகிருஷ்ண சாஸ்திரி அவர்கள் "Uma is a note of interrogation and negation" என்று அழகு படக் குறிப்பிடுகிறார்.

(3) 'உ' என்பது சிவபெருமானைக் குறிக்கும் 'மா' என்பது இலக்குமி அல்லது சக்தி எனப்பொருள்படும். சிவபெருமானின் சக்தி என்ற பொருளில் 'உமா' என்றாயிற்று. தனது சிவந்த நிறத்தால் தனது பதியான பரசிவனை விளங்கச்செய்வதாலும் 'உமா' எனப் பட்டாள் என்பர். ஆறுவயது கன்னியின் வடிவில் இருப்பவள் உமா என்றும் கூறுவர்.

(4) 'உமா' என்ற சொல் 'தேவி பிரணவம்' என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது சிவபெருமானே இதனை அன்னையிடம் விளக்குவதாக இலிங்க புராணம் குறிப்பிடுகிறது. "தேவி! எமது பிரணவம் அகரம் - உகரம் - மகரம் - என்ற முறையில் அமைந்துள்ளது. ஆனால் உமா என்ற உனது பிரணவம் உகரம் - மகரம் - அகரம் என்ற வரிசையில்மாறிக்காணப்படுகிறது. அவை முத்தொழிலையும் மும்மூர்த்திகளையும் குறித்துநிற்கின்றன" என்கிறார் ஈசன்.

(5) 'உ' என்றால் 'உயர்ந்த' என்றும் 'மா' என்றால் 'சித்தவ்ருத்தி' என்றும் பொருள்கொள்வர். ஆத்மஞானிகளுக்கு உயர்ந்த சித்தவிருத்தியினைக் கொடுப்பவளும் அச்சித்தவிருத்தியால் அடையத்தகுந்தவளும் ஆதலால் அன்னை உமா' எனப்பட்டாள்.

(6) யோகிகளின் இச்சாசக்தியே 'உமா' எனக் குறிப்பிடப் படுவதாகச் சிவசூத்திரம் கூறும்.

(7) விநாயகபீடம் மற்றும் சிந்துவனம் ஆகிய தலங்களில் கோயில் கொண்டுள்ள அன்னையின் திருநாமம் 'உமா' என்பதாகும்.

(8) குண்டலினி யோகத்தில் அநாஹதம் தொடர்பான - நாதப் பிரம்மம் தொடர்பான 'இந்துகலை' என்பதே 'உமா' என்றும் விளக்குவர்.

(9) அன்னைக்கு ஆயிரம் பெயர்கள் இருப்பினும் இறைவனின் பெயருடன் இணைத்துச் சொல்லும் பொழுது 'உமாபதி' என்றும் 'உமாமகேஸ்வரன்' என்றுமே பெரிதும் குறிப்பிடுகிறோம்.

(10) குழந்தைகளுக்குக் கடவுளை அறிமுகப்படுத்தும் பொழுது "அதோபார் உம்மாச்சி" என்று கூறுகிறோம். 'உமாமகேச்வரி' என்பதனையே அவ்வாறு குறிப்பிடுகிறார்.

அந்த உமாமகேஸ்வரியினைப் பட்டர் "உமையே" என்று அழைத்து இமயத்து வந்து தோன்றிய எளிமையினையும் ஏற்றம் படக் கூறுகிறார்.

ஈ. **இமயத்து அன்றும் பிறந்தவளே !**

(1) ஈசனின் அருள்வடிவாகி, உமையாகி, மலையரசனுக்கு மகளாக இமயமலையில் தோன்றியவள்.

(2) அருள்வடிவானவள் என்றால் அவளது அருளுக்கு ஓர் உதாரணம் வேண்டாமா? ஆகவே அவளது அருட்செயல்களில் ஒன்றாகிய இமயத்துதித்த நிகழ்ச்சியினை நினைவுபடுத்துகிறார். அவள் இமயத்துத்தோன்றி வளர்ந்ததன் காரணம் "அருளே" என்பதனைக் கந்தபுராணம் விளக்குகிறது.

"மன்னுயிர் புவனம் ஏனை மற்றுள பொருளுட்கெல்லாம்
அன்னையாய் உதவிநாளும் அவற்றினை வளர்த்து நிற்பாள்
தன்னையும் வளர்ப்பாருண்டோ? வளர்ந்தது சழக்கேஅந்த
கன்னிதன் அருளின் நீர்மை காட்டினள் போலுமன்றே"

— கந்தபுராணம். உற்பத்திக்காண்டம்

(3) பிறவா, இறவாப் பெருமாட்டி இமயத்து அன்று பிறந்தாள் என்பது எங்ஙனம் பொருந்தும்? அதன் உட்கருத்து வேறு!

அம்பிகை இமயச் சாரலில் பொய்கையொன்றில் தாமரைமலர் மிசைத் தோன்றினாள் வேள்விக் குண்டத்திலிருந்து லலிதாம்பிகையாகவும் மீனாட்சியாகவும் உதித்தெழுந்தாள்.

"சிதக்னிகுண்டசம்பூதா" அறிவாகிய அக்னிக் குண்டத்திலிருந்து தோன்றியவள் என்று சகஸ்ரநாமம் குறிப்பிடுகிறது.

'அசையாத பொருள்களில் நான் இமயமலையாக இருக்கிறேன்' என்று கண்ணன் கீதையில் கூறுகிறான். "ஸ்தைர்யேண ஹிமவானிவா" உறுதிப்பாட்டில் இமயம் போன்றவன் என்று இராமனை வால்மீகி வருணிக்கிறார்.

இமயம் என்பது அசையாதநிலையினை சலனமற்ற தன்மையினைக் குறிக்கும். இமயம் போல் அசையாத சித்தமுடைய மலையரசனுக்கு அன்னையின் அருள்கிட்டியது என்பதே உட்பொருள்.

தெளிந்த ஞானமுள்ளவர்களுக்கும் அசையாத சித்தமுள்ளவர்களுக்கும் அவளது அருள் காட்சியினை அளிக்கத் தோன்றுகிருள் என்பதே இப்புராணக் கதையின் தத்துவக் கருத்தாகும்.

(4) "இமயத்து அன்றும் பிறந்தவள்" என்பது உபசார வாக்கியமாகக் கூறுவதாகும். "மலைமகள் என்பதும் அவள்தன் தகைமையை நாடி விரும்புவதே" என்று இதனை அபிராமிபட்டரே பின்னர் விளக்குவார். அது உபசாரமாயின் உண்மைநிலையென்ன? அடுத்த சொற்ருெடர் இதனை "அழியா முத்தி ஆனந்தம்" என்று தெளிவாக்கும்.

(5) "அன்றும் மழை பெய்தது" என்று ஒருவர் கூறினல் குறிப்பிட்ட நாளைத்தவிர வேறு நாட்களிலும் மழை பெய்திருக்க வேண்டும் என்பது தெளிவாக விளங்கும். அவ்வாறே இமயத்துப் பிறந்தவள் மதங்கர்குலப் பெண்ணுகவும், மலையத்துவசன் மகளாகவும் கூடப் பிறந்திருக்கிருள் என்பது வெளிப்படும் வண்ணம் இமயத்து அன்றும் பிறந்தவளே என்ருர்.

## உ அழியாமுத்தி ஆனந்தமே!

(1) என்றும் அழியாத சாயுஜ்ய முத்தி ஆனந்தத்தின் வடிவானவள்.

(2) முக்தி ரூபா (முக்தி வடிவானவள்) என்கிறது இலலிதா சகஸ்ரநாமம்.

(3) அழியா முத்தி ஆனந்தமென்ருல், பின், அழியும் முத்தி ஆனந்தமுண்டே வென்னில் உண்டு. இறைவனின் உலகிடை வாழும் சாலோக்கிய முத்தியும், அருகில் வாழும் சாமீப்ய முத்தியும், இறைவனின் வடிவமெய்தும் சாருப்ய முத்தியும் அழியும் முத்திகளே. அம் முத்திகள் எய்தினேர் பல காரணங்களால் மீண்டும் பிறத்தல் உண்டு. இராவணன், கும்பகருணன் போன்ரேர் அம் முத்தி நிலைகளினின்று இறங்கிவந்து பிறந்தவர்களே என்பது அவர்களது முன்னுள் வரலாறுகளைக் காணும்பொழுது தெளிவாகும். ஆகவே இறைவனுடன் இரண்டறக் கலக்கும் ஸாயுஜ்யமுத்தி அடைந்தவர்களே அழியாமுத்தி யானந்தம் அடைந்தவர்கள் ஆவார்கள். அம் முத்தியானந்தநிலையே அம்பிகைதான்.

(4) இறைவனின் ஆனந்த நிலையினை அழியா முத்தி நிலையினைப் பற்றிக் கூறமுற்பட்ட வேதங்களேதும் முயற்சியில் தோற்றுத் திரும்பி விட்டனவாம்!

எனினும் நம் முன்னோர்கள் அம்முத்தி யானந்தம் எத்தகையது என்பதனைக் கோடுகாட்டிக் குறிப்பிடுகின்றார்.

மனிதனின் வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் கலந்தே வருகின்றன. துன்பம் எதுவுமே இல்லாமல் ஒருமனிதன் நூறாண்டு காலம் மகிழ்ச்சியினையே அநுபவித்தால் அது " மனுஷ்யானந்தம் " எனப்படும்.

மனுஷ்யானந்தத்தைப் போல் நூறுமடங்கு உடையது கந்தர்வர்களின் ஆனந்தம்.

கந்தர்வரானந்தத்தைப்போல் நூறுமடங்கு உடையது. தேவர்களின் ஆனந்தம்.

தேவானந்தத்தைப்போல் நூறுமடங்கு உடையது தேவேந்திரனின் ஆனந்தம்.

இந்திரானந்தத்தைப்போல் நூறுமடங்குடையது தேவகுருவான பிரகஸ்பதியின் ஆனந்தம்.

பிரகஸ்பதியின் ஆனந்தத்தைப்போல் நூறுமடங்கு உடையது பிரமனின் ஆனந்தம்.

இவ்வாறு மனிதன் தொடங்கிப் பிரமன் ஈறாகவுள்ள நூறால் பெருக்கிய ஆனந்த அளவு, முத்தியானந்தநிலையின் முன் எவ்வளவு சிறியது தெரியுமா ?

குளம்பினடியில் தேங்கும் நீர், கடல் நீரின்முன் எவ்வளவு சிறியதோ அது போல் சிறியதாகும் !

இப்படி முத்தியானந்த நிலையினை நம் முன்னோர் குறிப்பிட்டனர். அம் முத்தியானந்த நிலையினை அறியவும் அடையவும் முடியுமோ ? முடியும் ! அவள் அருளால் முடியும். அவள் இறங்கிவந்து இன்னருள் செய்து அந்நிலைக்கு உயர்த்துவாள் அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்.

அதைத்தான் இப்பாடலின் முன்பகுதி கூறுகிறது.

**(5) இறைவியுடன் இரண்டறக் கலக்கும் அம்முத்தியானந்த நிலையினைக் காஞ்சி மூககவி " ஆனந்தாத்வைத கந்தலி " ( ஆனந்த அத்துவிதத்தளிர் ) என்று குறிப்பிடுகிறார்.**

ஊ. நின்றும் இருந்தும்..................
..............................உன் மலர்த்தாள்

(1) நின்ற நிலையிலும், அமர்ந்தநிலையிலும், படுத்த நிலையிலும், நடந்து செல்லும் நிலையிலும் எப்போதும் உன்னையே நினைக்கின்றேன். எப்போதும் உன் திருவடி மலர்களையே வணங்குகிறேன் என்கிறார் பட்டர்.

(2) உடலால் எந்த நிலையில் இருந்தாலும் உள்ளத்தில் எப்போதும் அன்னையினைப் பற்றிய சிந்தையுடனேயே இருந்தார் அவர். அவளது மலரடிகளையே என்றும் வணங்கும் உறுதிப்பாட்டுடனும் வாழ்ந்தார்.

எழுதா மறையின் ஒன்றும் பொருளாக அம்மை குறிக்கப் படுவதால் இப்பாடலின் பாராயண பலன் வேத ஆகமப் பயிற்சிகளில் மேல் நிலையாய்துதல் ஆகும்.



---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

### Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.

இன்று என்பூர்வபுண்ணியபலனாக ஐயாறப்பன் - அறம்வளர்த்த நாயகியை வழிபடும்பேறு கிட்டிற்று. திருக்கோயிலின் தூய்மையும் கோயில் பூஜாக்கிரமங்களும் மிகவும் போற்றத்தக்கன. திருக்கோயில் ஊழியர்கள் அன்புடனும் பக்தி சிரத்தையுடனும் வழிபாடு செய்து வைத்தமைக்கு என் நன்றி. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஆசியால் மீண்டும் மீண்டும் இத்திருக்கோயிலில் வழிபடும்பேறு கிட்டவேண்டுமென்று இறைஞ்சுகின்றேன்.

(S·d) சண்முக நயினார்

Joint Registrar of Co-operatnie Societies

18—11—80 Thanjavur Region

# நாவுக்கரசர் நற்றமிழ்

வித்துவான். திரு. மு. வைத்தியநாதன், திருச்சி.

### தெய்வ வாழ்வு:

தெய்வச்சேக்கிழார் பெருமான், அப்பரடிகளைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து பாடியவர். அவர் பெருமைகளை எல்லாம் நெஞ்சாரச் சொல்லிமகிழ்ந்தவர். இந்தத் தமிழ்நிலத்தில் எண்பத்தொரு ஆண்டுகள், தெய்வ வாழ்வு வாழ்ந்த, அவர் பெருமைகளை என்னுடைய ஒருநாவினால் எப்படிப்பாடமுடியும்? என்று கேட்டுக் கொண்டவர். திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் பெருமைதனை ஒருநாவிற்கு உரைசெய்ய ஒண்ணுமை உணராதேன் என்று கூறுவதன்மூலம், தன் இயலாமையைத் தெரிவித்துக்கொண்டவர்.

### சிவ வேடம்:

காஞ்சிப்புராண ஆசிரியர், திருநாவுக்கரசர்பெருமானை நம் கண் எதிரில் காட்டுவார்போல், அவர் தோற்றத்தை எடுத்துரைக்கும் இயல்பு நினைந்து மகிழ்தற்குரியது. "சிவபெருமான்மீது இடையீடு இல்லாத பேரன்பும், மழைவாரும் இணைவிழியும், உழவாரத்திண் படையருத் திருக்கரமும், சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும், நடையருப் பெருந்துறவும், வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல் தொடையருச் செவ்வாயும், சிவவேடப்பொலிவழகும்" துதித்து வாழவேண்டியது நம்கடமையாகும் என்று நம்மை வழிப் படுத்துகின்றார்.

### கடல் கடந்தல்:

பரஞ்சோதிமுனிவர், ஆளுடைய அரசினைப் புகழ்ந்துரைக்கும் அழகு, தனி அழகாகும். "ஐந்து எழுத்தின் துணைகொண்டு, வஞ்சகர்களாம் சமணர்கள் இட்ட நீலநிறக்கடலிலிருந்தும், வினைத் தொடர்புடைய யாராலும் நீந்திக் கரைசேரமுடியாத ஏழு பிறவி என்னும் கடலிலிருந்தும், தன்னை விடுவித்துக் கொண்டவர் அப்பரடிகள்" என்று பாடிப்பரவுவார். "அஞ்செழுத்தால் வஞ்சகர் இட்ட நீலநிறப் பெருங்கடலும் யார்க்கும் நீந்துதற்கரிய ஏழு பிறப் பெனும் கடலும் நீத்தபிரான் அடி வணங்குவாம்" என்பது அவர் பாடல்.

**சிவபோகம்:**

தாயுமானவர், இந்த உலகில் **சிவபோகம்** என்ற ஒருநிலை, இவர் தவிர வேறு யாருக்கும் இல்லை என்று கூறும் வண்ணம், உழவாரம் என்னும் கருவியால் திருத்தொண்டு செய்துவந்த திருநாவுக்கரசர் மேல் அன்பு வைக்கும் நாளை நான் எதிர்பார்த்துள்ளேன் என்று கூறி அடிகளைப் போற்றுவார். "ஏரின் சிவபோகம் இங்கிவர்க்கே என்னஉழ வாரங்கொள் செங்கையர்தாள் வாழ்வு வைப்பது எந்நாளோ" என்று வருவது அவர் பாடல்

**பேரின்ப வாழ்வு:**

நம்பியாண்டார் நம்பிகள், ஓங்கிஉயர்ந்த மாடங்களையும் மாளிகைகளையும் உடைய திருவாமூரில் அவதரித்த மருள்நீக்கியார் என்னும் இளமைப் பெயருடைய திருநாவுக்கரசரின் பெயரைச் சொன்னால் போதும், பேரின்பப் பெருவாழ்வு பெறலாம் என்பர். "சென்று அரன் நெறியாகும் கரை அண்ணப் பெறுவார்கள்; வண்ணத்தின் சிலை மாடந்திகழ் புகழ் ஆமூர் உறை திருநாவுக்கரசு என்போரே" என்பது அவர்தம் திருவாக்கு.

**திருத்தொண்டு உறைப்பு:**

செம்மை நலஞ்சான்ற சான்றோர்களால், இவ்வாறு எல்லாம் போற்றி வணங்கப்படும் அப்பரடிகள், முற்பிறவியில் 'வாகீச முனிவர்' என்ற பெயர் தாங்கி, இறைவனின் அணுக்கராக இருந்தவர். தாம் செய்த தவம் பிழைத்ததால், உலகவர் உய்ய அவதரித்தவர். தூய்மையின் இருப்பிடமாக விளங்கியவர். அவாவின்மைக்கு இவரைத்தவிர சான்றுவார் வேறு எவருமிலர். தன் திருத்தொண்டின் உறைப்பினால், இடர் பல களைந்தவர். துறவிக்கு வேந்தனும் துரும்பு என்னும் அருந்தொடருக்கு இலக்கணமானவர். பல்லவனின் காவலர் வந்து அழைத்தபோது, "நாம் யார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம், ஏமாப்போம், பிணியறியோம், பணிவோம் அல்லோம்" என்று மறுமாற்றத்தாண்டகம் பாடியவர்.

**அருஞ்செயல்கள்:**

"சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம் சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம், பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப் புண்ணியனை நண்ணிய புண்ணியத்துள்ளோம்" என்று பாடும் உறைப்பு உடையவர். அதனால்தான் நீற்றறை, அவருக்குக் குளிர்நிழலாயிற்று. அவர்மீது சினந்து வந்த யானையும் வணங்கி மீண்டது. நஞ்சு நல்லமுதாயிற்று. கனத்த கல்லும் மிதவை ஆயிற்று. திருச்சத்தி முற்றத்தில் திருவடி தீட்சை பெறமுடிந்தது.

அப்பூதியார் மகனை மரணத்திலிருந்து மீட்கமுடிந்தது. திருப்பைஞ் ஞீலியில் பொதிசோறு பெற முடிந்தது.

அறிவுரை :

சிவபெருமான்மீது தாம் கொண்ட நம்பிக்கையினைத் தெளிவுபடுத்தும் போது அவர் கூறுவது, நினைந்து மகிழ்தற்பாலது. " தன்னைச் சரண் என்று தாளடைந்தேன், தன் அடி அடையப் புன்னைப் பொழில் புகலூர் அண்ணல் செய்வன கேண்மின்களோ ? என்னைப் பிறப்பு அறுத்து என் வினைக் கட்டறுத்து ஏழ் நரகத்து என்னைக் கிடக்க வொட்டான், சிவலோகத்து இருத்திடுமே " என வரும் பாடல், நமக்கெல்லாம் அறிவுரைபோல் அமைந்துள்ளது.

தமிழாளியார் :

அப்பரடிகள் பழுத்த தமிழ்ப்புலமையாளர். வடமொழி, பாலி மொழி நூற் பயிற்சியுடையவர், வேதாகமப் புலமை உடையவர், தேர்ந்த சொல்லாட்சியால் கவிபாடும் ஆற்றல் உடையவர், மொழித் தூய்மை காக்கும் உத்தமர் தாம் பாடிய (இன்றுள்ள) 306 பாடல்களில் 893 வட சொற்களையே பயன்படுத்தியவர். இது கூடுதலில் 5 விழுக்காடேயாகும். இதனால், " தமிழ் மொழித்தலைவர் " என்றும், "கோதில்மொழிக் கொற்றவனார்" என்றும், ' தமிழாளியார் ' என்றும் சேக்கிழார் பெருமானால் போற்றப்பெற்றவர்.

தாண்டகவேந்தர் :

தாண்டகம் என்ற புதிய செய்யுள் மரபினைத் தோற்றுவித்தவர். இடைக்காலத் தமிழிற்கு அப்பர் வழங்கிய நன்கொடை தாண்டகப் பாடல், எண்சீர் விருத்தங்களை ஏறத்தாழ ஒத்துள்ள இத்தாண்டகப் பாடல்கட்கும் வடமொழியாளரின் தாண்டகங்கட்கும் சிறிதும் தொடர்பில்லை. தமிழ்ச்செய்யுள் வகையாகிய இத்தாண்டகங்கட்கு அடிகளாரே முதல்வராதலின் ' தாண்டக வேந்தர் ' தாண்டகச் சதுரர் ' என்ற சிறப்புப் பெயர்களுக்கு உரியவர் ஆனார் இவரின் அருந்திருமுறை முழுவதும் திருத்தாண்டகங்களாகும் இவர் பாடியவை 312 பதிகங்களில், 3064 பாடல்கள். இவைகளில் 4 - ஆம் திருமுறை 113 - பதிகங்களையும் 1069 பாடல்களையும் உடையது. 5 - ஆம் திருமுறை 100 பதிகங்களையும் 1015 பாடல்களையும் உடையது 6 - ஆம் திருமுறை 99 பதிகங்களையும் 980 பாடல் களையும் உடையது. ஆறும் திருமுறையில் காணப்படும் 980 தாண்டகப் பாடல்கள், நுட்பமான செய்யுள் வடிவம் ஆகும், இதை இடைக்காலத் தமிழிலக்கியத்திற்கு வழங்கியவர் அப்பரடிகளேயாவர்.

## இறைவனைப் பாடியவர் :

பொதுவாக நாட்டில் ஒரு தொடர் வழக்கு உண்டு. அது, "என்னப்பன் என்னைப் பாடினான், சம்பந்தன் தன்னைப்பாடினான், சுந்தரன் பொன்னைப் பாடினான்" என்பதாகும். ஆம் சம்பந்தர். "ஞானசம்பந்தன் பாடல் பத்தும் பரவினர் ஞாலம் ஆள்வரே" என்று தன்னைப் பாடியிருப்பது உண்டு. பொன் வேண்டுமா? பொருள் வேண்டுமா? ஆள் வேண்டுமா? தூது போக வேண்டுமா? சுந்தரர் இறைவரிடம் கேட்டே பாடுவார். ஆனால், அப்பரடிகள் பெருமானையன்றி வேறு யாரையும் பாடியதில்லை. இதனால், அவரின் பணிவையும், அவாவின்மையையும் அறியலாம்.

## உபதேச மொழி :

சந்தப் பாடல்கள் வேண்டுமா? அருணகிரியார் உள்ளார். கனிவுடைய பாடல்கள் தேவையா? வாதவூரடிகள் உள்ளார், தாளக் கட்டோடு கூடிய பாடல்கள் வேண்டுமா? ஞானசம்பந்தர் உள்ளார். இலக்குடைய பாடல்கள் வேண்டுமா? நக்கீர தேவர்வந்து உதவுவார். சுவைத்திட நயமுடைய பாடல்கள் தேவையா? சுந்தரர் வந்து வழங்குவார். வாழ்க்கையில் உயர்வதற்கு வேண்டிய பாடல் கள் தேவையா? படியுங்கள் அப்பரடிகளின் பாடல்களை. வாக்கிற்கு அருணகிரி, வாதவூரர் கனிவில், தாக்கில் திருஞானசம்பந்தர். நோக்கிற்கு நக்கீர தேவர், நயத்துக்குச் சுந்தரர், சொற்கு உறுதி அப்பர் எனச் சொல் " என்ற பாடலில் வரும் சொற்கு உறுதி என்பதை, உறுதி சொற்கு என்று மாற்றி, உயர்தற்கு வேண்டிய உபதேச மொழி என்று பொருள் கொண்டால், பிறர் பாடலுக்கும் அப்பர் பாடலுக்கும் தனித்தன்மை விளங்கும்.

## திருவடியை எண்ணுக :

அப்பரின் வாக்குக்குத் தனித்தன்மை உண்டு கவி கவிஞனின் இயல்பைப் புலப்படுத்தும். உலக வாழ்வில் பல வகைத் துன்பங்களை அனுபவித்தவர் அப்பரடிகள். அதனால் அவர் பாடல்கள் நம் மனத்தை நெகிழ வைக்கும். திருநாவுக்கரசர் நம்மைச் சார்ந்த ஒருவர். நாம் படும் துன்பங்களை அவரும் பட்டிருக்கிறார். அவருடைய பேச்சும் உணர்வுகளும் நம்முடைய பேச்சு. உணர்வுகள் போல் உள்ளன. நாம் சொல்ல வேண்டியதை அவர் சொல்கிறார். அவர் தன் திருத் தொண்டின் உறைப்பால் உயர்ந்தார் நம் நிலை உயர வழிகாட்டி உள்ளார். வழி, "எம்பெருமான் திருவடியே எண்ணுக" என்பதே.



# கீரை

திரு. மு. விட்டல் எம். எஸ். ஸி. ( விவசாயம் )

கண்பார்வை இல்லாதவன் வாழ்வு பரிதாபத்திற்குரிய வாழ்வாகு மல்லவா ? இருந்தும் இந்தியாவில் ஆறுவயதிற்குள்ளான மாணவர் களில் 250 லட்சம் பேர் எதிர்காலத்தில் குருடர்களாக ஆவார்கள் என ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர்.

நாமோ நமது குழந்தைகளோ குருடாக விரும்புவோமா ? மாட் டோம். குருட்டுத்தன்மைக்கு அடிப்படையான காரணங்களாவன சத்துணவின்மையும் குறிப்பாக உணவில் உயிர்சத்து 'ஏ' ( வைட்ட மின் 'ஏ' ) இல்லாமையுமேயாகும்

உயிர்சத்து 'ஏ' பால், முட்டை, மாமிசம், கீரைகள் இவற்றில் கிடைக்கும். பால், முட்டை, இறைச்சி இவற்றை நாள்தோறும் போது மான அளவு உணவில்சேர்த்துக்கொள்ள வேண்டிய நிலையில் நமக்குப் பொருளாதார வசதி இல்லை. மேலும் கீரைகளில் உயிர்சத்து 'ஏ' மிகுதியாகவும் போதுமான அளவிலும் உள்ளது. ஆகவே எளிதில் கிடைக்கும் கீரையைப்பற்றித் தெரிந்துகொள்ளுவோமாக.

**கீரைகளின் முக்கியத்துவம் :**

1. செடியின் இலையானது-சத்துக்களைத் தயாரிக்கும் தொழிற்சாலை யாக இருத்தலோடு, அவற்றைச் சேமித்துவைக்கும் சேமிப்புக் கிடங்காகவும் உள்ளது. மேலும் இலைகளில்தான் புரதம், மாவு, கொழுப்பு, உயிர்சத்துக்கள், தாதுப்பொருள்கள் தயா ரிக்கப்படுகின்றன.
2. இலைகளின் செல்களில் இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ், பொட்டாசியம் போன்ற தாதுப் பொருள்கள் அதிகமாகச் சேகரிக்கப்படுகிறது.
3. (அ) கீரையானது, குடல்வேலையைத் துரிதப்படுத்திட குட லுக்குப் புத்துணர்ச்சியைத்தருகிறது.

   (ஆ) கீரையை உணவுடன் சேர்த்துக்கொள்ளுவதால் மலச் சிக்கலை நீக்குகிறது. மலச்சிக்கல் நீங்கினாலே மனித னது வியாதிகளனைத்தும் நீங்கியதாகவே கருதப்படு கிறது.

4. கீரையை உண்பதால் குருட்டுத் தன்மையை ஓரளவும், குரு டாகும் தன்மையை முழுவதுமாகவும் தவிர்க்கலாம். கீரையில் உள்ள உயிர்சத்து 'ஏ' கண்பார்வைக்கு மிகவும் தேவையாக வுள்ளது.

5. கீரையில் உயிர்சத்துக்களான ஏ. சி. பி 2. கே இ. முதலியன உள்ளன.

6. இத்தகைய சத்துக்கள் அதிகமாகக் கீரையில் அடங்கியிருப்ப தால் இது ஒருமுக்கிய காப்புணவாக வல்லுநர்கள் வலியுறுத்து கின்றனர்.

7. காய்களிலேயே கீரை மிகவும் விலை மலிவாகும்.

8. சாகுபடி செய்தலும் எளிதாகும்.

9. முளைக்கீரை. தண்டுக்கீரை இரத்த சுத்தத்திற்கு ஏற்றது.

10 கீரைகளில் மருந்து குணங்களும் உள்ளன.

11. கீரையை உணவில் சேர்த்துக்கொண்டால் எலும்புகள் வலி வுற்று பற்களும், ஈறுகளும் வலிமைபெறுகின்றன.

(அ) விலைகொடுத்து வாங்குவதாயினும் ஒருநாளைக்கு ஒரு நபருக்கு 5 பைசாவிற்குமேல் கீரையின் விலை போகாது. ஒருகுடும்பத்திற்கு ஒரு நாளைக்கு 10 முதல்20பைசாவே கீரைக்காகச் செலவாகும் ஆகவே ஐந்து பைசாவுக்கு ஆரோக்கிய வாழ்வு வாழ முயல்வோமாக.

இத்தகைய கீரையை ஒவ்வொரு மனிதனும் அன்றாடம் 125 கிராம் உணவுடன் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஆனால் தமிழகத்தே தற்போது 125 கிராமிற்குப் பதிலாக சுமார் 15 கிராம் கீரையையே சேர்த்துக்கொள்ளுகின்றனர்

குழந்தைகள் 3 வயதுவரை 50 கிராம் கீரை அவசியம் சேர்த்தல் வேண்டும் கீரையை வேகவைத்து இறுத்த இரசத்துடன் (கீரைசூப்) அளவாக உப்பு கலந்து சிறுகுழந்தைகட்கு 4 பாலாடை நாள்தோறும் புகட்டலாம். ஓராண்டிற்கு மேற்பட்ட குழந்தைகட்கு மசியவைத்த கீரையை அவசியம் நாள்தோறும் ஊட்டவேண்டும். 3 வயது முதல் 6 வயது குழந்தைகட்கு அவசியம் 75 கிராம் கீரையை உணவுடன் கொடுத்தல்வேண்டும்

கீரைகளில் குறிப்பாக முருங்கை, அரைக்கீரை. பசலைக்கீரை அகத்தி, மணத்தக்காளி கரிசாளங்கண்ணி. தவசிக்கீரை, சிலோன் பசலை எனப் பலவகை உண்டு. இவற்றை வீட்டுத்தோட்டத்தில் பயிரிட்டு அன்றாடம் உணவில் சேர்த்துக்கொள்வோமாக. இத்தகைய முக்கியம் வாய்ந்த கீரையை உணவில் சேர்த்துக்கொண்டு நோயற்ற வாழ்வு வாழ்வோமாக.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**ரௌத்திரி ஹூ தை மீ 1உ முதல் 29உ முடிய.**

**(14—1—1981 முதல் 11—2—1981 முடிய)**

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| | இராசி | | ரா |
| கே செ சூ பு | | | |
| சு | ல/ | | கு.சனி |

| | | | |
|---|---|---|---|
| பு | சனி | சந் கு | கே |
| | அம்ஸம் | | சு |
| சூ | | | |
| செ ரா | ல/ | | |

ஸ்ரீ ரௌத்திரி ஹூ மார்கழி மீ 29 உ மங்களவாரம் அசுவதி நக்ஷத்திரம் பாலவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 52 நாழிகைக்கு விருச்சிக லக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு தனுர் ராசியிலிருந்து மகர ராசி சங்கிரமணமாகத் தைமாதப் பிரவேசம் செய்தருளுகிறார். மறுதினம் புதவாரம் உத்தராயண புண்ணியகாலமாகும் சங்கிரம வாராதிபலன் புதபகவான் நீரஸாதிபதியாகிறார். அதனாலும் சங்கிரம கால கிரகஸ்திதியாலும் நீரஸவஸ்துக்களாகிய நல்முத்து, தங்கம், மரகதம், பலவர்ண வஸ்திரங்கள் மிகுதியாகக்கிடைக்கும் விஞ்ஞான அறிஞர்களால் பல சாதனைகள் ஏற்படும். உயிர்காக்கும் ஔஷதங்கள் பலவாகிவரும். மருத்துவர்கள் ஆசிரியர்களுக்கு நல்ல வாய்ப்புக்கள் ஏற்படும் நெசவாளர்களுக்கு நல்லன ஏற்படும். தேசங்களில் இறைவன்தூதுவர்களாகவந்து ஆட்சிப் பொறுப்பேற்றுள்ள சிவநெறி பண்பாளர்களாகத்திகழ்கின்ற மன்னர்கள், ஜனாதிபதிகள், மந்திரிகள்

என்றும் சிவதர்மம்பேணி, தம் ராஜரிகத்தில் தர்ம நீதிபரிபாலனம் நடத்திவருவர். எல்லாவகை சமூகத்தினரும் நலம் பல அடைவர். தேசங்களில் எங்கும் சிவபுண்ணியகாரியங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கும்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் சிவராஜ யோகத்தில் வீற்றிருக்கின்ற சிவஞான குருமகான்கள் லோகமாந்தர்களுக்குச் சிவபரம்பொருளை உணர்த்தி நன்னெறி போதித்து அருள்வார்கள். அன்னர் திருவாய்மலர்ந்து பிரஸ்தாபிக்கின்றபடிக்கு லோகமெங்கும் சிவபுண்ணிய காரியங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கும். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் தெய்வ பூசனைகள் சிறப்பாக நடைபெறும். லோகமாந்தர்கள் தெய்வபக்தி மிகுந்து நன்மார்க்கத்தில் பொருளீட்டி க்ஷேமகரமாக வாழ்வார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை ¼**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும் குடும்பத்தில் நல்ல பண வருமானங்களை ஏற்படுத்திவரும். ஜனவரி 28 தேதிக்கு சிவந்த வஸ்துவின் பிராப்தியையளிக்கும் செந்நெல் ஆதாயம் தரும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் நல்லன ஏற்பட்டுக்கொண்டிருக்கும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கும். அரசாங்க புகழ் தரும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜனவரி 14, 15, 18, 19, 25, 26, 27, 28 பிப்ரவரி 3, 4 5, 6, 7, 10, 11 தேதிகளில் மிகவும் நற்பலன்களை ஏற்படுத்தும். ஜனவரி 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**2. ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி – மிருகசீர்ஷம் ½**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். பணவருமானங்களில் மாத முதலில் நல்ல நிலைமையை ஏற்படுத்தும். பின் பகுதியில் நிர்ப்பந்தமானதாகச் செலவினை ஏற்படுத்தும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும் பூமி இயந்திரங்களில் ஓரளவு பலன் வரும். வீடு மனை சம்பந்தமாக மனோவேக பிரச்சினை எழும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜனவரி 16, 17, 20, 21, 27, 28, 29, 30, 31 பிப்ரவரி 6, 7, 8, 9 தேதிகளில் பண ஆதாயாதி நன்மைகளை ஏற்படுத்தும். பிப்ரவரி 1, 2 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை – புனர்பூசம் ¾**

( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பத்தில் பண வருமானம் வந்துகொண்டிருக்கும். அடிக்கடி அவசிய செலவுகளும் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். சில விஷயங்களில் குழப்ப சிந்தனையாகி, காரியங்கள் தயங்குவதாகும். சகோதரருக்கு உயர்வு தரும். வித்தியா வியாபாராதிகள் கலைத் தொழில்கள் முன்னேற்ற ஸ்திதியில் விளங்கும். தந்தைக்கு இரத்தாதிக்க நலிவு ஏற்பட்டுக் குணமாகும். மற்றவர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜனவரி 14, 15, 18, 19, 22, 23, 24 30 31 பிப்ரவரி 1 2, 8, 9, 10, 11 தேதிகளில் நற்பலன் தரும். பிப்ரவரி 4, 5 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**4. கடகம் :- புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானம் வந்துகொண்டிருக்கும். சகோதரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜனவரி 27 தேதிக்கு குஜன் மாறுதலில் சாதாரணமாகச் சருக்கிவிழுதல் போன்ற விபத்து ஏற்பட்டுத் தப்பும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்தல் நலம். வித்தியாவியாபாராதி கலைத்துறைகளில் மதிநுட்பகாரியங்களில் நல்லன ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். ஜனவரி 14, 15, 16, 17, 20 21, 25, 26 பிப்ரவரி 1, 2, 3, 4 5, 10, 11 தேதிகள் சந்துஷ்டியாதி நற்பலன்களை அளிக்கும். பிப்ரவரி 6, 7 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் ¼**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்களில் நல்ல நிலைமையை ஏற்படுத்தி வரும். சகோதரர் சகோதரிகளின் நலம் நன்றாக இருந்துவரும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் விசேஷ பலன் தரும். வாகன சுகம் திருப்தியளிக்கும். எல்லாக் காரியங்களும் வெற்றிகரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கும். தாரபுத்திரர்களுக்குச் சௌக்கியபலன் தரும். ஜனவரி 16 17, 18 19, 22, 23, 27, 28 பிப்ரவரி 3. 4, 5, 6, 7 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். பிப்ரவரி 7, 8 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிர பலனு நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் வந்து கொண்டிருக்கும். சகோதரர் சுகம் நன்ருக இருந்து வரும். பசு பால் பிராப்தி திருப்தியளிக்கும் ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய ஆயாசம் நீங்கும் புத்திரர் களுக்கு சௌக்கியம் ஏற்படும். ஜனவரி 27 உ ஆனுல் எல்லாக்காரியங் களிலும் ஜெயபிராப்தியாகும், தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜனவரி 18, 19, 20, 21, 25, 28, 30, 31 பிப்ரவரி 6, 7, 8, 9 தேதிகளில் மிகுந்த நற்பலன் அளிக்கும் ஜனவரி 14, 15 பிப்ரவரி 10, 11 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

7. துலாம் :- சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )

துலா ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும் புத்திரர்கள் ஒப்பந்தங்களில் நல்லன ஏற்பட்டு வரும். சகோதரர் நலன்களுக்கு நல்ல காரியங்களைச் செய்யும். வாகன பிராப்தியில் புதியன ஏற்படும் புத்திரனுக்கு வெப்பாதிக்க நலிவு ஏற்பட்டுக் குணமாகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும் ஜனவரி 14, 15, 20 21, 22, 23, 27, 28, 29 பிப்ரவரி 1. 2, 8, 9. 10. 11 தேதிகளில் மிகுந்த நற்பலன் தரும். ஜனவரி 16, 17 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் – கேட்டை.

( தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு. )

விருச்சிக ராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். பண வருமானம் வந்துகொண்டிருக்கும். பொன் மணி பூஷணங்களை யளிக்கும் வீடு வாகன பிராப்தியில் சௌகரியம் மேலிடும். புத்திரனின் கல்வி கலை தொழில் துறைகளில் மேன்மை ஸ்திதியை உண்டு பண்ணும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜனவரி 14, 15, 16, 17, 22, 23. 24 25. 26, 30, 31 பிப்ரவரி 4, 5, 10. 11 தேதி களில் தனுதாயம், வல்லமையால் காரியசித்தி ஆகிய நற்பலன் ஏற்படும். ஜனவரி 18, 19 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் ¼**

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர் ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பத்தில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். ஜனவரி 27உ ஆனுல் செந்நெல் பிராப்தியையளிக்கும். முயற்சித்த காரியங்களில் நன்மைகளை உண்டாக்கும். சகோதரருக்குச் சுபம் ஏற்படும் வீடு வாகன பிராப்தியில் சௌகரியம் மேலிடும். ஜீவனேபாயத்தில் அரசாங்க நன்மையை ஏற்படுத்தும் ஜனவரி 16, 17, 18 19, 25, 26, 27, 28 பிப்ரவரி 1, 2, 6, 7 தேதிகள் தனுதாயாதி நற்பலன்கள் ஏற்படும். ஜனவரி 20, 21 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**10. மகரம் :- உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகர ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பண வருமானங்களை ஏற்படுத்திவரும். சகோதரர்கள் மேன்மை ஸ்திதியில் இருந்துவருவர் வித்தியா வியாபாராதிகளைத் துறைகளில் பிரசித்தம் ஏற்படும். புத்திரி சம்பந்தமாகச்சுபமான செலவைச் செய்யும் தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஜனவரி 28உ முதல் மௌனமாக இருந்து காரியங்களைச் சாதித்தல் வேண்டும். ஜனவரி 18, 19, 20, 21, 27, 28 29 30, 31 பிப்ரவரி 4, 5 8, 9 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜனவரி 22, 23, 24 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திம பலன் தரும்.

**11. கும்பம் :- அவிட்டம் ½ – சதயம் - பூரட்டாதி ¾**

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்தம். குடும்ப அபிவிருத்தியில் பண வருமானங்கள் நல்லவிதத்தில் வந்துசேரும். அடிக்கடி அவசிய செலவினங்களும் ஏற்படும். எழுத்துமூல விஷயங்களில் அரசாங்க நிர்ப்பந்தம் ஏற்பட்டுத் துரிதமாகும் வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்துவரும் தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜனவரி 14, 15, 20, 21 22, 23 24, 30, 31, பிப்ரவரி 1, 2, 6, 7, 10, 11 தேதிகளில் பண ஆதாயம் சுப நிகழ்சிகளில் ஈடுபாடு ஆகும் ஜனவரி 25, 26 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**12. மீனம் :- பூரட்டாதி ¼- உத்திரட்டாதி - ரேவதி.**

**( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )**

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் மூன்று விதங்களில் பண வருமானம் வரும். பூமி இயந்திரங்களில் நற்பலன் வந்துசேரும். வீடு வாகன பிராப்தியில் நவீனம் ஏற்படும். புத்திரர்களால் - பௌத்திரர்களால் சந்துஷ்டி நிலை ஏற்படும். தாம்பத்திய வாழ்க்கை தெய்வ பக்தியுடன் நடந்துவரும். ஜனவரி 16, 17, 22, 23, 24, 25, 26 பிப்ரவரி 1, 2, 3, 4 5, 8 9 தேதிகளில் பண ஆதாயம் உற்சாக சம்பவங்கள் ஏற்படும். 27, 28, 29 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்



---

**இயற்கை மருத்துவம்**

# நெல்லிக்கனி

## திரு. கெ. கி. சத்தியநாராயணன், கோயம்புத்தூர்.

சங்க இலக்கியத்திலும், புராணங்களிலும் இடம்பெற்றுள்ள இந் நெல்லிக்கனியில் வைட்டமின் 'சி' மிகுதியாக உள்ளது. இதன் குணங்களில் பயன்களில் சில :—

1. நெல்லிச்சாறு இதய பலவீனம் மாரடைப்பு, இரத்த அழுத்தம் மிகல் இவற்றைக் குணமாக்கி இரத்தத்தைத் தூய்மையடையச் செய்யும்.

2. நெல்லிச்சாறு ஒரு அவுன்சும், எலுமிச்சைசாறு ஒரு அவுன்சும் கலந்து பருகினால் வயிற்றுப் பூச்சிகள் அழியும்

3. நெல்லிச்சாற்றில் தேன்கலந்து சாப்பிட்டால் பித்தம் குறையும்.

4. நெல்லிப்பொடியில் தேன் அல்லது நெய்விட்டுக் குழைத்து இரவில் உணவுக்குப்பின் உண்டுவர கண் பார்வை மிகும்.

5. நெல்லிப்பொடியை வாயில்போட்டு வாயில் சிறிதுநேரம் வைத்திருந்து விழுங்கினால் தொண்டைகட்டு, குரல்கம்மல் ஆகியவை நீங்கும். குரல் இனிமையடையும்.

# செய்திகள்

## ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவசர் குருபூஜை விழா

தருமையாதீனம் இரண்டாவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவச தேசிக சுவாமிகள் குருபூஜை விழா, மார்கழித்திங்கள் 9 ஆம் நாள் புதன்கிழமையன்று (24-12-80) குருமூர்த்த ஆலயத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி, விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தி வழிபாடாற்றினார்கள். மாலை வழிபாட்டின் போது ஸ்ரீ மாணிக்கவாசகர் அருளிய "திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி" விழாமலராக வெளியிடப்பெற்று அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. காலை வழிபாட்டின் பின்னர் 'நால்வகை நெறிகள்' என்னும் தலைப்பில், மகாவித்துவான் திரு சி. அருணை வடிவேல் முதலியார், வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. திரு. கா. ம. கண்ணப்பன் பி. லிட், சென்னை லயோலா கல்லூரித் தமிழ்த்துணைப் பேராசிரியர் திரு. அ. பாலகுருவாயன் எம். ஏ. ஆகியோர் முறையே, நன்மகன்மை நெறி, தொண்டு நெறி, தோழமை நெறி, அறிவுநெறி என்னும் பொருளில் விரிவுரை ஆற்றினர். ஆதீன அடியவர் ஸ்ரீ நெல்லையப்ப சுவாமி நன்றி கூறினார். மாலை 6 மணியளவில் தருமையாதீனத் திருக்கோயில் திருமுறைப் பணியாளர்கள் திருபுவனம் திரு. S. தண்டபாணி, சீகாழி திரு. S. திருஞானசம்பந்தம் ஆகியோர் திருமுறை இன்னிசையரங்கு நிகழ்த்தினர். ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களும் மாயூரம் நகரப் பெருமக்களும் மற்றும் அன்பர்பலரும் வழிபட்டுக் குருவருள் பெற்றுய்ந்தனர்.

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் 23 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் ஆலயவழிபாடு மார்கழித்திங்கள் 10 ஆம் நாள் (25—12—80) வியாழக்கிழமை காலை திருக்கொண்டீச்சரம் அருள்மிகு பசுபதிநாதர் ஆலயத்திலும், பகல் திருப்பனையூர் அருள்மிகு சௌந்தரேசுவரர் ஆலயத்திலும், மாலை விற்குடி வீரட்டேசுவரர்

ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது காலை 9 மணியளவில் திருக்கொண்டீச்சரத் திருக்கோயிலிலும் 11 மணியளவில் திருப்பனையூர்த் திருக்கோயிலிலும் மாலை திருவிற்குடித் திருக்கோயிலிலும் சமயச்சொற்பொழிவுகள்: திரு வி சா. குருசாமி தேசிகர் எம். ஏ. ஆதீன அடியவர் ஸ்ரீ நெல்லையப்ப சுவாமி ஆகியோரால் சமயச் சிந்தனை உரைகள் நிகழ்த்தப்பட்டன. தலத்திருப்பதிகங்கள் அவ்வத் தலங்களில் பாராயணம் செய்யப் பெற்றன. அச்சிடப்பெற்ற தலத்திருப்பதிகங்கள் வழிபாட்டில் கலந்து கொண்ட அன்பர்கட்கும் உள்ளூர்ப் பெருமக்களுக்கும் வழங்கப்பெற்றன. அன்பர் பலர் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

## திருவெம்பாவை விரிவுரை

**தருமையாதீனத்தில் :**

தருமையாதீனத் திருமடத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன்னிலையில் திருவாதிரை விழா நாட்களில் 17—12—80 முதல் 21—12—80 முடிய திருவெம்பாவை விரிவுரை நாள்தோறும் மாலை 7 மணியளவில் தொடங்கி நடைபெற்றது. மாயூரம் மன்னன் பந்தல் அ. வ. அ. கல்லூரித் தமிழ்த் துணைப்பேராசிரியர், தருமையாதீனப் புலவர், செஞ்சொற்கொண்டல், தமிழாகரர் டாக்டர். திரு சொ. சிங்கார வேலன் எம். ஏ, பிஎச். டி. அவர்கள் விரிவுரை நிகழ்த்தினார்கள். தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியவர்களும், ஆதீன அலுவலர்களும் ஆதீனக் கல்வி நிலையங்களின் ஆசிரியர்களும் விரிவுரையினைக் கேட்டுப் பயன்பெற்றனர்.

**ஆதீனத் திருக்கோயில்களில் :**

தருமையாதீன அருளாட்சியில் விளங்கும் திருக்கோயில்களில் திருவாதிரை விழா நாட்களில் 17—12—80 முதல் 20—12 80 முடிய திருவெம்பாவை விரிவுரை தக்க அறிஞர்களைக் கொண்டு நிகழ்த்துவிக்கப் பெற்றது. தலப்பெருமக்கள் விரிவுரை கேட்டும் ஆலயவழிபாடாற்றியும் பயன்பெற்றனர். வைத்தீசுவரன்கோயில் அருள்மிகு வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. அவர்களும், சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ. அவர்களும், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் மதுரகவி. வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்களும், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ. அவர்களும், திருக்கோளிலி

ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் கவிஞர் ஞானச்செல்வன் எம். ஏ , பி எட். அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான் திரு செ. முத்தையன் எம். ஏ., அவர்களும், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி தேவஸ்தானத்தில் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் திரு. கு சுந்தரமூர்த்தி, எம். ஏ அவர்களும், குத்தாலம் ஸ்ரீ உக்த வேதீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமிதேசிகர். எம். ஏ. அவர்களும், பேரளம் ஸ்ரீ சுயம்புநாத சுவாமி தேவஸ்தானத்தில் வித்துவான் திரு. சு. மு. சுந்தரராஜன் எம். ஏ, அவர்களும் விரிவுரையாற்றினர். விழா நாட்களில் திருவெம்பாவை பண்ணிசையுடன் ஓதப்பெற்றது. அன்பர் பலரும் வந்திருந்து கேட்டுப் பயனுற்றனர்.

## பொன்னூசல் விழா

**வைத்தீஸ்வரன்கோயிலில் :**

வைத்தீஸ்வரன் கோயில் என வழங்கும் வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில் திருப்பொன்னூசல்விழா 13—12—80 சனிக்கிழமை அன்று தொடங்கி நடைபெற்றது. இந்நாட்களில் இறைவனையும், இறைவியையும் ஊஞ்சலில் எழுந்தருளச்செய்து திருவெம்பாவை ஓதி வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. 22—12—80 திங்கட்கிழமை திருவாதிரைநாளில் ஸ்ரீ நடராஜர் அபிஷேகமும் திருவீதியுலாவும் சிறப்பாக நடைபெற்றன. அன்பர்பலர் வழிபட்டுப் பயன் பெற்றனர்.

**சீகாழியில் :**

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் திருப்பொன்னூசல்விழா 13—12—80 சனிக்கிழமை தொடங்கி நடைபெற்றது. நாள்தோறும் மாலையில் சுவாமி அம்பாள் பிராகாரத்தில் வலம்வருதலும் ஊஞ்சலில் எழுந்தருள்வித்தலும், காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் பிராகாரத்தில் எழுந்தருளிவரத் திருவெம்பாவை ஓதித் தீபாராதனை நிகழ்தலும் நடைபெற்றன. 21—12—80 ஞாயிறன்று இரவு திருவாசகத்தின் ஒருபகுதியாகிய திருப்பொன்னூசல் ஓதித் தீபாராதனை நிகழ்ந்தது. 22—12—80 திங்கட்கிழமை, திருவாதிரைநாளில் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. பின்னர் ஸ்ரீ நடராசர் திருவீதியுலாக் காட்சியை அன்பர் பலர் தரிசித்துப் பயன் பெற்றனர்.

### தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின்

# மார்கழிமாதச் சிறப்பு வழிபாடு

மார்கழிமாதத்தை வழிபாட்டிற்குரிய மாதமாக நம் முன்னோர்கள் கொண்டுள்ளனர். அதனாலேயே முன்னோர்கள் சைவ – வைணவத் திருக்கோயில்களில் வைகறைப்போதில் திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டையும் சிவன்கோயில்களில் திருவாதிரைப் பெருவிழாவையும் திருமால்திருக்கோயில்களில் வைகுண்ட ஏகாதசிப் பெருவிழாவையும் ஏற்படுத்தி வழிபட்டுவருகின்றனர். இம்மாதம் தேவர்களின் விடியற் காலம் என்றும் அவ்விடியற்காலவேளையில் இறைவழிபாடு செய்து இறையருள் பெறவேண்டும் என்றும் கருதி இம்மார்கழிமாத வழிபாட்டை நம் முன்னோர்கள் மேற்கொண்டுள்ளனர். மாதங்களுக்குள் மார்கழி மாதமாக இருக்கிறேன் என்று பகவத்கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூறியிருக்கிறார் என்பது இம்மாதத்திற்கு மேலும் சிறப்புத் தருவதாகும். இம்மாதத்தில் இறைவழிபாட்டை மேற்கொள்வோர், இவ்வாண்டு முழுவதும் செய்யும் செயல்களெல்லாம் நன்மையாகவே முடியும் என்பது நம் முன்னோர்கள் முடிவு. அம்முறையிலே நம் நாட்டில் திருப்பள்ளியெழுச்சி வழிபாடு எல்லாத்திருக்கோயில்களிலும் சிறப்பாக நிகழ்த்தப் பெறுகிறது.

தருமையாதீனத் திருக்கோயில்களிலும் மார்கழிமாத வழிபாடுகள் சிறப்பாக நிகழ்த்தப்பெறுகிறது தருமையாதீனம் இருபத்தாறுவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தமது ஆன்மார்த்தமூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டை விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நாள்தோறும் சிறப்பாக நிகழ்த்தியருளுகின்றார்கள்.

பின்னர் ஸ்ரீ ஞானபுரீசுவரர், ஸ்ரீ தருமபுரீசுவரர், ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காம்பிகைத் திருக்கோயில்களில் வழிபாடு நிகழ்த்தி ஆதீனத் திருக்கோயில்களுக்கும் பிற திருக்கோயில்களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கி ஆசியருளுகிறார்கள். ஆங்காங்கும் உள்ள மக்கள் பலருக்கும் இறைவழிபாட்டு முறையை உணர்த்தவும் அவர்களை இறைவழிபாட்டில் ஈடுபடுத்திப் பயன்பெறச்செய்யவும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பலதலங்களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றியருளுகிறார்கள். மேலும் ஆதீனத் திருக்கோயில்களுக்கு எழுந்தருளும்போது ஆதீன உயர் அலுவலர்களையும் உடனழைத்துச்சென்று ஆதீனத் திருக்கோயில்களின் நிர்வாகத்தை மேற்பார்வையிடச்செய்து நெறிப்படுத்தியருள்வதும் குறிப்பிடத்தக்கது

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நாள் தோறும் எழுந்தருளி நிகழ்த்தும் இச்சிறப்பு வழிபாட்டின்போது உலக நலங்கருதி சுவாமிக்கும், அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனை களுடன் அருச்சனையும் நிகழ்த்துவித்து வழிபாடாற்றுகிறார்கள்.

சோழநாட்டைச் சிவாலயமாகக்கொண்டு வழிபடும் முறையில் மத்தியார்ச்சுனம் என வழக்கும் திருவிடைமருதூர்த் திருக்கோயி லையும், சூழவுள்ள திருவலஞ்சுழியை விநாயகர் தலமாகவும், சுவாமி மலையை முருகன் தலமாகவும், திருவாவடுதுறையை நந்தித் தலமாக வும் திரு ஆலங்குடியைத் தட்சிணாமூர்த்தித்தலமாகவும் சிதம்பரத்தை நடராஜப் பெருமானுக்குரிய தலமாகவும், சீகாழியைப் பைரவர் தல மாகவும், திருவாரூரைச் சோமாஸ்கந்தர் தலமாகவும், திரு ஆப்பாடி யைச் சண்டேசுவரர் தலமாகவும், சூரியனார்கோயிலை நவக்கிரகத் தல மாகவும்கொண்டு விளங்கும் தலங்களையும் வழிபட்டருளுகின்றார்கள்.

**வழிபாடுசெய்த திருத்தலங்கள் :**

மார்கழிமாதம் முதல்நாள் வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத்திய நாதசுவாமி திருக்கோயில், 2-ம்நாள் பேளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி திருக்கோயில், 3-ம்நாள் மாயூரம் வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யே சுவரசுவாமி திருக்கோயில், திரு இந்தளூர் ஸ்ரீ பரிமளரெங்கநாதசுவாமி திருக்கோயில், 4-ம்நாள் வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி திருக்கோயில் (கிருத்திகை), 5-ம்நாள் தருமபுரம் ஸ்ரீ தரும புரீசுவரசுவாமி திருக்கோயில், 6-ம்நாள் மாயூரம் ஸ்ரீ காசிவிசுவநாத சுவாமி திருக்கோயில், 7-ம்நாள் சிதம்பரம்ஸ்ரீசபாநாயகர் திருக்கோயில், 8-ம்நாள் வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக் கோயில், திருநின்றியூர் ஸ்ரீ லட்சுமிபுரீசுவரசுவாமி திருக்கோயில், 9-ம்நாள் மாயூரம் ஸ்ரீ மாயூரநாதசுவாமி திருக்கோயில், குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், 10-ம்நாள் திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி திருக்கோயில், ஆலங்குடி ஸ்ரீ காசியாரண்யே சுவரசுவாமி திருக்கோயில், 11-ம்நாள் திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடே சுவரசுவாமி திருக்கோயில், சீகாழி ஸ்ரீ பிரமபுரீசுவரசுவாமி திருக் கோயில், திருமுல்லைவாயில் ஸ்ரீ முல்லைவனநாதசுவாமி திருக்கோயில், 12-ம் நாள் திருநள்ளாறு ஸ்ரீ தர்ப்பாரண்யேசுவரசுவாமி திருக்கோயில், காரைக்கால் தருமபுரம் ஸ்ரீ யாழ்மூரிநாதசுவாமி திருக்கோயில், 13-ம் நாள் திருக்குறுக்கை ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி திருக்கோயில், 14-ம் நாள் திருவலஞ்சுழி ஸ்ரீகபர்த்தீசுவரசுவாமி திருக்கோயில், சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாதசுவாமி திருக்கோயில், திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவர சுவாமி திருக்கோயில், 15-ம்நாள் வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத் தியநாதசுவாமி திருக்கோயில், 16-ம்நாள் விளநகர்ஸ்ரீ துறைகாட்டும் வள்ளலார் திருக்கோயில்.

# தைமாதச் சிறப்பு நாட்கள்

14—1—81 புதன், உத்தராயண புண்ணியகாலம், திருவையாறு தீர்த்தம். சங்கராந்திப் பண்டிகை திருக்கடவூர் ஸ்ரீ காலசம்ஹார மூர்த்தி அபிஷேகம். சீகாழி ஸ்ரீ உமாமகேசுவரருக்கு உச்சிக் காலத்தில் புழுகாப்பு. குத்தாலம் ஸ்ரீசந்திரசேகரர் காவிரியில் தீர்த்தம் கொடுத்தருளல்.

15—1—81 வியாழன், கனுப்பண்டிகை. மாட்டுப்பொங்கல், தருமை ஸ்ரீ சண்முகர் கிருத்திகை அபிஷேகம் கிருத்திகைவிரதம்.

16—1—81 வெள்ளி, வேளூர்க் கிருத்திகை. வேளூரில் ஸ்ரீ கற்பகவிநாயகருக்குத் தைமாத சுக்கிரவார உற்சவாரம்பம். ஸ்ரீ தையல் நாயகி அம்பாளுக்குச் சந்தனகாப்பும் நவசக்தி அருச்சனையும். சீகாழி, திருக்கடவூர் முதலிய தலங்களில் அம்பிகைக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நவசக்தி அருச்சனையும் நடைபெறும். இதுதைமாதம்ஒவ்வொருசுக்கிரவாரமும் நிகழும்.

17—1—81 சனி, மகாப்பிரதோஷம், தருமை ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காம்பிகைக்கு சம்வத்சராபிஷேகம். கண்ணப்ப நாயனார் குருபூஜை.

18—1—81 ஞாயிறு, அரிவாட்டாய நாயனார் குருபூஜை

19—1—81 திங்கள், தருமை ஸ்ரீ வனதுர்க்காதேவி சம்வத்ஸராபிஷேகம்.

20—1—81 செவ்வாய், தைப்பூசம். புஷ்ய உற்சவ தீர்த்தம். பௌர்ணமி விரத பூஜை. மாதபூஜையில் தேன் அபிஷேகம். வடலூரில் இராமலிங்கசுவாமிகள் ஜோதிதரிசனம். வேளூரில் உண்டியல் வைத்தல். ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கும், ஸ்ரீ சண்முகருக்கும் சண்முகார்ச்சனை. இது தைமாதம் ஒவ்வொருசெவ்வாயிலும் நடைபெறும்

21—1—81 புதன், ஆயில்ய விழா

23—1—81 வெள்ளி. சங்கடஹரசதுர்த்தி.

24—1—81 சனி சண்டேசுவர நாயனார் குருபூஜை

25—1—81 ஞாயிறு, ஆலவேலி ஸ்ரீ சித்திவிநாயகர் சம்வத்ஸராபிஷேகம். திருவையாறு தியாகராஜ சுவாமிகள் 134 ஆம் ஆராதனை.

26—1—81 திங்கள், குடியரசுதினம். பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம், தருமையாதீனம் 15 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீமாசிலாமணிதேசிகசுவாமிகள் குருபூஜை.

28—1—81 புதன், காளாஷ்டமி.

29—1—81 வியாழன் ஸ்ரீதாயுமானவர்குருபூஜை. திருநீலகண்டநாயனார் குருபூஜை.

30—1—81 வெள்ளி. விளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார் சுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

1—2—81 ஞாயிறு, வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி கடைச் செவ்வாய் உற்சவாரம்பம்.

2—2—81 திங்கள், பிரதோஷம்.

3—2—81 செவ்வாய், மாதசிவராத்திரி கிருஷ்ணாங்காரக சதுர்த்தசி.

4—2—81 புதன், அமாவாசை. திருக்கடவூர் ஸ்ரீ அபிராமி பட்டர் அருள்பெறு திருநாள்.

6—2—81 வெள்ளி, அப்பூதிஅடிகள் நாயனார் குருபூஜை.

8—2—81 ஞாயிறு, குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி சம்வத்ஸர அபிஷேகம்.

9—2—81 திங்கள், கலிக்கம்ப நாயனார் குருபூஜை.

10—2—81 செவ்வாய், வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி கடைச் செவ்வாய் தீர்த்தம், திருக்கடவூர் ஸ்ரீ முனீஸ்வரபூஜை.

11—2—81 புதன், ரதசப்தமி. மாசிமக உற்சவ ஆரம்பம்.

# ‘தமிழ் வளர்க்கும் தருமபுரம்’

[ ஆதீன வெளியீடு எண். 772 கிரௌன் 1×8 பக்கங்கள் 188. ஆசிரியர் தருமையாதீனக் கல்லூரித் துணைப்பேராசிரியர் வித்துவான். திரு. இரா செல்வக் கணபதி எம். ஏ., விலை ரூ 5—00. ரெக்கார்டெட் டெலிவரி உள்பட அஞ்சற் செலவு ரூ. 1—25. ]

தருமையாதீனம் கடந்த நானூற்றைம்பது ஆண்டுக் காலமாகச் சிவநெறி வளர்ச்சியோடு இணைத்து செந்தமிழ் மொழிக்கு ஆற்றிவந்திருக்கும் பணிகள் அளவில. இந்த பாரம்பர்யம் மிக்க ஆதீனத் தமிழ்வளர்ச்சிப் பணிகளை ஆராய்ச்சிநோக்கில் விரித்தெழுதப்பெற்ற ‘தமிழ்வளர்க்கும் தருமபுரம்’ என்ற இந்நூல் மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழ்மாநாட்டையொட்டி வெளியிடப் பெற்றுள்ளது. திருமடங்களின் தோற்றம் - வளர்ச்சி, ஆதீனக் குருமூர்த்திகள் அருளிய நூல்கள், ஆதீன அடிய வர்களின் படைப்புக்கள், ஆதீன ஆதரவு பெற்றோர் பாடிய பனுவல்கள், ஆதீன வெளியீடுகள், ஆதீனத் தமிழ் வளர்ச்சிப் பணிகள் என இவ்வாறு பல பகுப்புக்களோடு இந்நூல் எளிய இனிய நடையில் அமைந்துள்ளது. தமிழ் இலக்கிய வரலாற்றுக்கும், தமிழில் ஆய்வு மேற்கொள்வார்க் கும், சைவாதீனங்களின் தமிழ்ப்பணிகளை மதிப்பிட விழை வார்க்கும் இந்நூல் பேருதவியாகும். வேதாரண்யம் கஸ்தூரிபா சாந்தி கன்னியா குருகுல அச்சகத்தினரால் நூல் அழகாக அச்சிடப்பெற்றுள்ளது.

மேலாளர், ‘ஞானசம்பந்தம் பதிப்பகம்’, தருமபுரம், மாயூரம் அஞ்சல், 609001. தஞ்சை மாவட்டம் என்ற முகவரிக்கு M. O. மூலம் தொகை அனுப்பிப் பெறலாம்.

Printed & Published by V. Ramaiah Pillai, Manager, Dharmapuram at the Gnanasambandam Press Dharmapuram, Mayuram. 10-1-81